# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN):978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 4 விளைச்சல் : 41 திருவள்ளுவர் ஆண்டு 2054 அகுதோபர் – 2023

உள்ளே...





# சிறைத் துறைக் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Armourer | – கருவி வினைஞர் |
| Central jail | – நடுவண் சிறை |
| Criminal justice | – குற்றவியல் நீதி |
| Deputy jailor | – துணைச் சிறை அலுவலர் |
| Dormitory | – துயிற்கூடம் |
| Execution rope | – தூக்குக் கயிறு |
| Fugitive | – தப்பியோடிய குற்றவாளி |
| Gallows | – தூக்கு மேடை |
| Head warder | – தலைமைக் காவலர் |
| Investigate | – புலனாய்வு செய் |
| Jail clothing | – சிறை உடை |
| Jail library | – சிறை நூலகம் |
| Jail test | – சிறைத்துறைத் தேர்வு |
| Jailor | – சிறை அலுவலர் |
| Life sentence | – வாழ்நாள் தண்டனை |
| Lock–up report | – காவல் சிறை அறிக்கை |
| Penal grade | - தண்டனை நிலை |
| Political prisoner | – அரசியல் சிறையாளி |
| Premature release | – முன்கூட்டிய விடுதலை |
| Remand prisoner | – உசாவல் சிறையாளி |
| Solitary confinement | – தனிச் சிறைவைப்பு |
| Special jail | – சிறப்புச் சிறை |
| State jail | – மாநிலச் சிறை |
| Sub–jail | – சார்புச் சிறை |
| Supervision order | – மேற்பார்வை ஆணை |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2054 கன்னி (புரட்டாசி)

அகுதோபர் – 2023

ஆசிரியர் : முனைவர் கோ.விசயராகவன்
இயக்குநர்

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

# செய்தி ஊடகங்களில் பிறமொழிக் கலப்பு வேண்டாம்!

பேச்சுத்தமிழ், எழுத்துத்தமிழ் என இரு நிலையில் உள்ள மொழியில் தூயதமிழ் (அ) தனித்தமிழைப் பின்பற்றுக என வரும்போது அது முதலில் எழுத்துத்தமிழுக்குத்தான் உரியதாகும். அதற்காக, பேசும்போது எப்படி வேண்டுமானாலும் பேசலாம் என்பதில்லை. பேசுவதற்கு வழக்காற்றுச் சொற்களைப் பயன்படுத்துவதில் தவறில்லை. ஆனால் பிறமொழிக் கலப்பு தான் மொழிச் சிதைவுக்குக் காரணமாகிறது.

உண்மையில் நீங்கள் நம்புகிறீர்களோ இல்லையோ நாம் அன்றாடம் தமிழ் என்று நினைத்துப் பயன்படுத்தும் பல சொற்கள் தமிழ் இல்லை. அவை பிறமொழிச் சொற்களாகும். ஆங்கிலச் சொற்களின் கலப்பை அறியாமலேயே அதையும் தமிழ்ச்சொல் போலப் பயன்படுத்துகிறோம். இது மொழிவளர்ச்சிக்கு உகந்தது அல்ல. மொழியைச் சிதைவிலிருந்து காப்பது நம் ஒவ்வொருவரின் கடமையாகும். மொழிகாத்தல், தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்தல் என்ற முதன்மைப் பணி இல்லில் இருந்தே தொடங்க வேண்டும்.

ஊடகத்தமிழின் உண்மையானபங்களிப்புதான் தமிழ்மொழியை மேலும் வலுவாக்கும். எத்தனையோ நிலைகளில், துறைகளில் தமிழைக் கொண்டு சேர்க்கும் பணி நடந்தாலும் பெருவாரியான மக்களை அடைவது ஊடகங்கள் ஆகும். எனவே, அச்சு ஊடகமாக இருந்தாலும், காட்சி ஊடகமாக இருந்தாலும் மொழியைக் கொச்சைப்படுத்தாமல், பிறமொழிக் கலப்பை, பிறமொழிச் சொற்களை நேரடியாகக் கொண்டு சேர்க்காமல், மொழி வழி மொழி நிலைத்திருக்க நம்மால் ஆன முயற்சிகளைச் செய்வது நம் ஒவ்வொருவரின் கடமையாகும். கிறித்தவப் பாதிரிமார்கள், ஐரோப்பியர்கள், தமிழகத்தில் கால் பதித்த போது உருவானது உரைநடை இலக்கியம். இது மொழிக்கு ஒரு புதிய படிவளர்ச்சியை ஏற்படுத்தியது என்றால் தவறில்லை.

கடந்த நூற்றாண்டின் இறுதிவரை அதாவது 1980வரை கூட ஊடகத் தமிழ் இலக்கியத் தமிழாகவே இருந்துள்ளது. ஆனால் சில ஆண்டுகளாக ஊடகம் என்பது வணிக நோக்கில் அமைந்து மொழிவளர்ச்சிக்கான எந்த முன்னெடுப்பையும் செய்யவில்லை எனலாம். ஊடகத் தமிழானது மொழி வளர்ச்சிக்கான உண்மையான பங்கினை வழங்கினால் மட்டுமே இனிவரும் காலங்களில் மொழி வளர்ச்சிநிலை அடையும். மலேசிய ஊடகங்களில் மலாய் மொழிக் கலப்பு அதிகம் என புள்ளிவிவரங்கள் கூறுகின்றன. அதுபோல் தமிழகத்தில் தமிழுடன் ஆங்கிலக் கலப்பு நேரடியாக உள்ளது. இது வருத்தத்திற்குரியது.

ஆங்கிலேயர்கள் நம்மை ஆண்டதால் அவர்களது தாக்கம் நம்மிடம் உள்ளது என எளிமையாக சமாதானம் கூறி, சிலர் கடந்து செல்கின்றனர். அது தவறு, "எம்மொழியையும் கற்றுத் தேர்" என்ற பாரதிதான்,

"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவது எங்கும் காணோம்"

என்றான். மொழிக் கலப்பு என்பது பெற்ற தாயே தன் குழந்தைகளுக்கு நஞ்சூட்டுவதற்குச் சமம். எத்தனை மொழிகளைக் கற்றாலும் அம்மொழியைத் தனித்தன்மையுடன் ஆள வேண்டும். எழுதுதல் என்பது பற்றி கூறிய சமூகவியல் ஆய்வாளரான மிஷேல் பூக்கோ, எழுத்து என்பது கைகளுக்கு அளிக்கப்படும் கழைக்கூத்தாட்டப் பயிற்சி என்கிறார். இந்நாளில் தமிழா அல்லது ஆங்கிலமா எனத் தெரியாத அளவில் ஆங்கிலத்தைத் தமிழ் போல் எண்ணி வழங்குகின்றனர்.

- வெயிட்டிங்
- கோயிங்
- ஈட்டிங்
- சர்ப்ரைஸ்
- பைபை
- மிஸ்டேக் .... என இதன் பட்டியல் நீள்கிறது.

ஒவ்வொரு மொழிக்கும் ஒரு தனிப்பெருமை உண்டு. ஆங்கிலத்தைத் தடையின்றிப் பேசுவது எளிதல்ல. தமிழைத் தனித்தமிழில் பேசுவது எளிதன்று. இப்படி அதனதன் தனித்தன்மைகளை அழித்துப் பேச்சிலும் எழுத்திலும் மொழியைச் சிதைத்தல் பேராபத்தானது.

ஒரு சிறிய சொற்றொடரைக் கவனிப்போம்...

ஹலோ! ஈவினிங் ஷாப்பிங் போகலாம். டே ஆஃப்டர் மூவி போகலாம். டோட்டலா டேவை நல்லா என்ஜாய் பண்ணலாம். ஹாப்பிதானே மா?

மொத்தம் 16 சொற்கள் அமைந்த இந்த சொற்றொடரில் 5 சொற்கள்தான் தமிழில் உள்ளன. இதில் நாம் எங்கிருந்து தேடுவது மொழிவளர்ச்சியை. அன்றாடம் பயன்படுத்தும் சொற்களில் பஸ், ஆட்டோ, டீ, காலேஜ், ஆபிஸ், வொர்க்கர்ஸ் எனப் பயன்படுத்தாமல் பேருந்து, தானி, தேநீர், கல்லூரி, அலுவலகம், பணியாளர்கள் எனப் பயன்படுத்தலாமே?

மொழி வளர்ச்சிக்கான எந்த முன்னெடுப்பையும் நாம் செய்யவில்லை என்றாலும்கூட தாழ்வில்லை. மொழிச் சிதைவுக்கு இசைவளிக்காமல் இருந்தாலே போதும். மொழி தானாகவே வளம் பெறும். நிற்க,

இவ்வியக்ககம் செயற்படுத்தி வருகிற கலைச்சொல்லாக்கம் உள்ளிட்ட மொழிக்காப்புப் பணிகளுக்குத் துணை நிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன்.

அகராதியியல் அறிஞர் முனைவர் ச.சச்சிதானந்தம் அவர்களின், "செந்தமிழ் வளர்த்த ஈழத்து மூதறிஞர் வரலாறு – ஓர் பன்முக ஆய்வு" என்னும் பொருண்மையிலான கட்டுரையின் தொடர்ச்சியும், மலேசியத் தமிழ்நெறிக் கழகத்தின் தேசியத் தலைவர் திரு. இரா. திருமாவளவன் அவர்களின், "சீனம் தமிழ் திரிசொற்கள் ஒரு சிறு ஒப்பீடு" என்னும் கட்டுரையும், மேனாள் ஆங்கில விரிவுரையாளர் முனைவர் ஆ. அரிமாப் பாமகன் அவர்களின் "சிட்டு" எனும் கட்டுரையும், முனைவர் ப. கொழுந்தசாமி அவர்களின், "திருக்குறளில் நீடு" எனும் கட்டுரையும், இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணைய வழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும், என் உள்ளார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்சு அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன்.

தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...

# செந்தமிழ் வளர்த்த ஈழத்து மூதறிஞர் வரலாறு

## – ஓர் பன்முக ஆய்வு



முனைவர் பேரா. ச.சச்சிதானந்தம்
இயக்குநர் பன்னாட்டு உயர்(கல்வி) தமிழாய்வு நிறுவனம், பாரிசு

**தமிழ் வளர்ச்சிக்கு ஈழத்தறிஞர்கள் மேற்கொண்ட முயற்சிகள்**

ஈழநாட்டில் தமிழ் வளர்ச்சிக்கான முயற்சிகள் அறிஞர்பெருமக்களால் பல்வேறு கோணங்களில் மேற்கொள்ளப்பட்டிருக்கிறன. அவ்வாறான ஆக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டதற்கு அவ்வவ்வறிஞர்களின் துறைசார் ஈடுபாடுகளே காரணம். ஈழத்தறிஞர்கள் தமிழ் வளர்ச்சிக்காக, பாரம்பரியக் கல்வி மரபு, பல்கலைக்கழகக் கல்வி மரபு எனும் முக்கிய தளங்களை ஆதாரமாகக் கொண்டு இருசாராராகச் செயற்பட்டனர். அவ்வகையில் ஈழத்தறிஞர்கள் மேற்கொண்ட ஆக்கமுயற்சிகள் பின்வருமாறு:

01. பதிப்பு முயற்சிகளும் அகராதி முயற்சிகளும்

02. தமிழ் மரபிலக்கணமும் மொழியியலும்

03. தமிழ் இலக்கிய வரலாறு

04. தமிழும் அறிவியலும் மருத்துவமும்

05. சமயமும் தத்துவமும்

06. பத்திரிகை

07. இஸ்லாமியத் தமிழ் இலக்கியம்

08.வரலாற்று நாயகர்களும் அறிஞர் பெருமக்களும்

09.பலதுறைகள் சார்ந்த மொழிபெயர்ப்பு முயற்சிகள்

10. மலையகத் தமிழியல் கலைக்களஞ்சியம்

**தமிழ் வளர்த்த ஈழத்தறிஞர்களின் கல்விப்புலம்**

| பாரம்பரியக் கல்வி முறையில் தமிழ் வளர்த்தவர்கள் | பல்கலைக்கழகக் கல்வி முறையில் தமிழ் வளர்த்தவர்கள் |
|---|---|
| | |

ஈழத்துத் தமிழறிஞர்கள் பாரம்பரியக் கல்வி முறையில் தமிழ் கற்றுப் பாண்டித்தியம் பெற்றவர்களும் உண்டு. தமிழ் கற்பதற்காகத் தமிழகம் சென்று தமிழ்ப்புலமை பெற்றவர்களும் உண்டு. இலங்கைப் பல்கலைக்கழகங்களிலும் இந்தியப் பல்கலைக் கழகங்களிலும் மேலைநாட்டு இங்கிலாந்துப் பல்கலைக் கழகங்களிலும் முனைவர் (கலாநிதிப்) பட்டம்பெற்று அறிஞர்களான பேராளர்களும் உண்டு. இவர்கள் அனைவரும் தத்தம் கல்வி, அறிவுப் புலமைகளுக்கேற்பத் தமிழை வளர்த்திருக்கிறார்கள்.

***பாரம்பரியக் கல்வி முறையில் தமிழ் வளர்த்தவர்களில் முக்கியமானவர்கள்:**

01. சி.கணேசையர்.

02. பண்டிதமணி.சி.கணபதிப்பிள்ளை

03. புலவர்மணி பெரியதம்பிப்பிள்ளை

04. கந்தமுருகேசனார்

05. புலவர்மணி ஆ.மு. ஷரிபுத்தின்

06. பாவலர். தெ.அ. துரையப்பா பிள்ளை

07. அருள்வாக்கி அப்துல் காதீர் புலவர்

08. குமாரசுவாமிப் புலவர்

09. யாழ்ப்பாணம் பதுறுத்தீன் புலவர்

10 வித்துவான் எவ். எக்ஸ். சி. நடராஜா

* பல்கலைக்கழகக் கல்வி முறையில் தமிழ் வளர்த்தவர்களில் முக்கியமானவர்கள்:

01. சுவாமி விபுலானந்தர்

02. பிரான்சிஸ் கிங்ஸ்பெரி

03. பேராசிரியர். க. கணபதிப்பிள்ளை

04. பேராசிரியர். வி.செல்வநாயகம்

05. பேராசிரியர். ம.மு. உவைஸ்

06. பேராசிரியர். சு.வித்தியானந்தன்

07. பேராசிரியர். க. கைலாசபதி

08. பேராசிரியர். பொ.பூலோகசிங்கம்

09. பேராசிரியர். கா.சிவத்தம்பி

10. பேராசிரியர். சுசீந்தரராஜா

அவ்வகை முயற்சிகள், மரபு முறையிலான ஆய்வுகள், மரபு முறையுடன் நவீன முறை ஆய்வுகள், அறிவியல் பூர்வமானதும் நவீன முறையுடன் கூடிய ஆய்வுகள் என மூன்று பிரிவுகளாக மேற்கொள்ளப்பட்டன.

### மரபு முறையிலான ஆய்வுகள்

உரையாசிரியர்களும், புராண இதிகாசச் சொற்பொழிவாளர்களும், வித்துவ பரம்பரையினரும் முயற்சிகள் எடுத்தனர். அவர்களில் குறிப்பிடத்தக்க சிலர் :

ஞானப்பிரகாசசுவாமிகள், வித்துவசிரோமணி ந.ச.பொன்னம்பலபிள்ளை, சபாபதி நாவலர், புலோலியூர் கதிரவேற்பிள்ளை, மகாவித்துவான் கணேசையர், பிரம்மஸ்ரீ நவநீத கிருஷ்ண பாதிரியார், பண்டிதர். பொ.கிருஷ்ணன், பண்டிதமணி. சு. அருளம்பலவாணர், சுன்னாகம் அ.குமாரசாமிப் புலவர், ஆசுகவி வேலுப்பிள்ளை, நமசிவாய தேசிகர், நா.சிவபாத சுந்தரனார், பண்டிதமணி சி.கணபதிப்பிள்ளை, புலவர்மணி பெரியதம்பிப்பிள்ளை, பண்டிதர்கள் வீரகத்தி, இ.வடிவேல், வே.அகிலேசபிள்ளை முதலியோர் மனங்கொள்ளத் தக்கவர்கள்.

### மரபு முறையுடன் நவீன முறை ஆய்வுகள்

இவ்வகை ஆய்வு முயற்சிகள் மேற்கொண்டவர்களில் மாதகல் மயில்வாகனப் புலவர், தி.த.கனகசுந்தரம்பிள்ளை. குல. சபாநாதன். எஃப்.எக்ஸ்.சி.நடராசா. க.சொக்கலிங்கம். கலா நிதி.ஆ.கந்தையா.

### அறிவியல் பூர்வமானதும் நவீன முறையுடன் கூடிய ஆய்வுகள்

இவ்வகை ஆய்வு முயற்சிகளை பரிசோதனை செய்தவர்களில் வி.கனகசபைப்பிள்ளை. சைமன் காசிச்செட்டி. ஆனந்தக்குமாரசுவாமி.ஆனல்ட். சதாசிவம்பிள்ளை ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள்

### இலக்கணச்சுருக்கம். இலக்கண வினாவிடை எனும் பெயர்களில் நூல்கள்

இலக்கணம், இலக்கணச்சுருக்கம். இலக்கண வினாவிடை எனும் பெயர்களில் பல நூல்கள் பல அறிஞர்களால் ஆக்கப் பட்டிருக்கின்றன.

நாவலரவர்கள் இலக்கணச்சுருக்கம் (1873), இலக்கண வினாவிடை(1875), எனும் பெயர் களில் நூல்கள் எழுதியிருந்தாலும், இவருக்கு முன்பாகவே இதேபெயர்களில் இலக்கணச் சுருக்கம் என்ற பெயரில், இராமாநுச கவிராயர்(1848), மயிலை சவேரிமுத்துப் பிள்ளை (1860), இலக்கண வினாவிடை என்ற பெயரில் தாண்டவராய முதலியார் (1820) ஆகியோர் எழுதியிருக்கிறார்கள். விசாகப்பெருமாள் ஐயரும் பாலபோத இலக்கணம் (1852) வினா விடை முறையில் எழுதியிருந்தார். இவர்களின் நூல்களையும், நாவலரவர்களின் நூலையும் ஒப்பிடும் போது, நாவலர் தமது கல்விப்போதனை நோக்கங்களுக்கு இளைய சந்தி பிரித்தும் நிறுத்தக்குறியீடுகளை அமைத்தும் எளிமையான உதாரணங்களை எடுத்தாண்டும் இலகுவான முறையில் இலக்கண நூல்களை வெளியிட்டார்.

### தமிழ்நூல் பதிப்பாசிரியர்கள் சி.வை.தா.வும், உ.வே.சா.வும்

தமிழ்ப்பணிகளிலேயே தலைமையான பணி பதிப்புப்பணி. இப்பணியிலே இராவ் பகதூர். சி.வை.தாமோதரம்பிள்ளை, தமிழ்த்தாத்தா உ.வே. சாமிநாதையர், வசனநடை வல்லாளர் ஆறுமுக நாவலர், மழவை மகாலிங்க ஐயர் முதலானோர் தலைசிசிறந்த பதிப்பாசிரியர்களாக விளங்கினார்கள். இவர்களில் முதன்மையான முன்னோடிகள் முதலிரு அறிஞர்களுமே. தாமோதரம்பிள்ளை பதிப்புகளையும் சாமிநாதையர் பதிப்புகளையும் ஒப்புநோக்கி ஆராயும் போது, கால ஆராய்ச்சி, சரித்திர உணர்வு, ஒப்பியல் நோக்கு, திறனாயும் தன்மை, ஆய்வறிவு நேர்மை, முறையியல் நுட்பம் ஆகியன ஐயரிலும் பார்க்க பிள்ளையிடத்து அதிகமாகக் காணப்படுவதை அவதானிக்கலாம்.

தமிழ்தாத்தா அநேக நூல்களைப்

பதிப்பித்துள்ளார் எனினும் மூலபாட ஆராய்ச்சிக் கோட்பாட்டு அடிப்படையில் மேற்கொள்ளவில்லை. அனுபவத்தால் அறியப்படுபவற்றை ஆதாரமாகக் கொண்டே நூல்களைப் பதிப்பித்து வந்தார். ஆனால் இராவ்பகதூர் மூலபாடத் திறனாய்வை முழுமையான ஆய்வுத்துறையாகக் கொண்டு செயற்பட்டார்.

ஒரு நூலைப் பதிப்பிக்கையில், அதற்கு முற்பட்ட பதிப்பு முயற்சிகளைக் குறிப்பிடுதல் வரலாற்று உணர்ச்சியின் பாற்படுவது ஆகும். பின்வரும் ஆய்வாளருக்குச் சில செய்திகள் வழங்கப்படுதல் இன்றியமையாதது. பின்வரும் பதிப்புகள் மேலும் திருத்தம் அடைய அச்செய்திகளும் தகவல்களும் உதவும். இந்த விடயத்தில் இருவருக்கும் வேறுபாடு உண்டு. இவ்வாறாகக் குறிப்பிடும் பண்பை ஐயரவர்கள் புறந்தள்ளிவிடுவார். ஏனெனில் தம்மை ஒத்த அறிஞர்களினதும் சகாக்களினதும் சேவையையும் சாதனையையும் அங்கீகரிக்கத் தயக்கம் காட்டுபவராய் இருந்திருக்கிறார் என ஔவை.சு.துரைச்சாமிப்பிள்ளையும், எஸ்வையாபுரிப்பிள்ளையும் கூறிச்சென்றார்கள்.பிள்ளையவர்களின் கல்வித் தகுதி ஐயர்களிடத்து இல்லாததும் இதற்குக் காரணம் எனக் குறிப்பிடப்படுகிறது.

யாதும் ஊரே யாவரும் கேளிர் என்பதை நெறிப்படுத்தியவர்

13 மொழிகளறிந்த தமிழ்த்தூதர்

அனைத்துலகத் தமிழாராய்ச்சிக் கழகம் அமைத்து, தமிழாராய்ச்சி மாநாடு நடாத்த வேண்டும் என்பதனை நீண்டநாள் கனவாகக் கொண்டிருந்தார் தனிநாயகம் அடிகள். 1961இல் மலேசியப் பல்கலைக்கழகத்தில் இந்தியக்கலைத்துறைகளின் பேராசிரியராகவும் பீடாதிபதியாகவும் நியமிக்கப்பட்டதன் பின்னர், சில தமிழறிஞர்கள், ஆர்வலர்கள் பங்குபெறும் ஆலோசனைக் கூட்டத்தை 1962 இல் மலேசியாவில் கூட்டி அனைத்துலகக் கழகம் அமைப்பதற்கான தீர்மானங்களைக் கொண்டு வரச்செய்தார். இதனைத் தொடர்ந்து 1964 தை 7ஆம் நாள் புதுடெல்லியில் பேராசிரியர். தெ.பொ.மீனாட்சி சுந்தரம் தலைமையில் இருபத்தாறு அறிஞர்கள் ஆதரவுடன் தமிழாராய்ச்சிக் கழகத்தை நிறுவினார். கழகத் தலைவர் பிரான்சு நாட்டுப் பேராசிரியர். ஜோன் பெலியோசா. துணைத்தலைவர்கள் பேராசிரியர்கள் தெ.பொ. மீ., மு.வ., இலண்டன் பேராசிரியர். த.பபோ. ஏமனோ, ஒல்லாந்துப் பேராசிரியர். குய்ப்பா, இணைச்செயலாளர்கள் : தனிநாயகம் அடிகள்., போராசிரியர் கமில் சுவெலபில்.

இத்தமிழாராய்ச்சிக் கழகம் இதுவரைக்கும் ஒன்பது உலகத் தமிழாராய்ச்சி மாநாடுகளை நடத்தியிருக்கிறது.

***முதலாவது மாநாடு –கோலாலம்பூர் – மலேசியா –1966***

***இரண்டாவது மாநாடு – சென்னை– இந்தியா– 1968***

***மூன்றாவது மாநாடு – பிரான்சு – பாரிசு–1970***

***நான்காவது மாநாடு – யாழ்ப்பாணம் – இலங்கை–1974***

***ஐந்தாவது மாநாடு – மதுரை – இந்தியா–1981***

***ஆறாவது மாநாடு – கோலாலம்பூர் – மலேசியா– 1987***

***ஏழாவது மாநாடு – ஃபோர்லூயி – மொரிசியசு –1989***

***எட்டாவது மாநாடு – தஞ்சாவூர் – இந்தியா –1995***

***ஒன்பதாவது மாநாடு– உலகச் செம்மொழி மாநாடு – கோயம்புத்தூர் – இந்தியா – 2011***

மொழி ஞாயிறுக்கு முன் சொற்பிறப்பு ஆராய்ச்சியை ஆரம்பித்தவர் ஞானப்பிரகாசர்

'இதுகாறும் பல அகராதிகள் வெளிவந்திருப்ப, நாம் புதிதாய் ஓர் அகராதி வெளியிடுவது யாதுக்கு என்றால் இப்போது தெளிவாகும். இதன்முன் தமிழ் அகராதி செய்தோர் எல்லாம், ஒவ்வோர் சொல்லிற்கும் உரிய பொருட்களை ஆராய்ந்து மேலும் சிறப்புற விளக்கினாரே அன்றி, சொற்களுக்குப் பிறப்பிடமாய் நின்ற அடிகளை முறைப்படி தேடிக் கண்டு அவ்வவற்றின் கீழ் அவ்வவற்றின் கிளைச்சொற் கூட்டங்களை அமைத்தார் அல்லர். அது மட்டும் அன்று, தமிழடிகளை அறுதியிடுவதற்கு உரிய கட்டளைகளை வகுப்போரும் எக்காலத்தாவது தோன்றியிராமையால், தமிழிற்கு அடிகள்தாம் உளவா என்ற ஐயுறவுக்கும் இடம் உண்டாயிற்று..... முகவுரை– சொற்பிறப்பு ஒப்பியல் அகராதி – 1938

– சொற்பிறப்பாராய்ச்சிக்கு ஓர் உதாரணம் : குரங்கு எனும் சொல் பிறந்த வரலாறு....

குர – ங்கு எனுஞ் சொல் கொடு – கு

எனுஞ் சொல்லின் மருஉ. கொடு– குதலே குடங்குதல். குரங் – குதல். குடகு என்றால் குழை. குழை என்றால் உலை. உலைதல் என்றால் உள்விழுதல். உள்விழுதல் என்றால் வளைதல். வளைந்து குடங்கிய மேனியையுடைய மிருகம். தமிழ்ச் சொற்பிறப்பாராய்ச்சி.

அட்டவணை – 1

அகராதிப்பணியில் முதலில் ஈடுபட்ட தமிழர்கள் ஈழத்து அகராதியியலாளர்களே! யாழ்ப்பாணத்தில் பணியாற்றிய மெதடிஷ், அங்கிலிக்கன், அமெரிக்கன் மிஷனரிமார் தமிழ் – தமிழ் அகராதியையும், தமிழ் – தமிழ் – ஆங்கிலம் அகராதியையும் உருவாக்க முயன்றனர். ரோட்லரின் (J.P.Rottler) அகராதி வெளிவந்த பின்னரும் அவர்கள் ஊக்கம் குன்றாது இப்பணியில் ஈடுபட்டனர். ரோட்லரின் அகராதி இந்திய உபகண்டத்தின் தமிழையே கொண்டிருந்தது. யாழ்ப்பாணத்துத் தமிழைச் சேர்க்கவில்லை என மைரன் வின்ஸ்லோ தாம் தொகுத்த அகராதியில் குறிப்பிட்டுள்ளார்.

யாழ்ப்பாணத்திலே முதல் முதல் அகராதிப் பணியில் 1812ஆம் ஆண்டிலிருந்து ஈடுபட்டவர் ஜோசப் நைற் என்ற அங்கிலிக்கன் மதபோதகர் ஆகும். இவருக்கு வட்டுக்கோட்டை மிஷனரி தமிழாசிரியரான காபிரியேல் திசெரா, உடுவில் சந்திரசேகர பண்டிதர், இருபாலை சேனாதிராஜா முதலியார், மெதடிஷ் மிஷன் பீற்றர் பேர்சிவல், அமெரிக்க மிஷனரி லீவை ஸ்போல்டிங் ஆகியோர் துணை புரிந்தார்கள். இந்த அகராதி 1842 இல் லீவை ஸ்போல்டிங் கால் மானிப்பாய் அமெரிக்கன் மிஷனரி அச்சகத்தில் பதிப்பிக்கபட்டது. இதுவே பின்னாளில் மானிப்பாய் அகராதி, யாழ்ப்பாண அகராதி என வழங்கப்பட்டது. இதுவே அகரவரிசையில் சொற்கள் அமைக்கபட்ட அகராதி.

ஆங்கிலம் – தமிழ் அகராதி 1844 இல் மைரன் வின்ஸ்லோ மானிப்பாய் அமெரிக்கன் மிஷன் அச்சகத்தில் வெளியிட்டார். இதன் மூன்றாவது பதிப்பு ஈழத்துச்சொற்களுக்கு இந்தியச்சொற்கள் மாற்றி 1888 இல் சென்னையில் வெளியிடப்பட்டது. தென்னிந்தியாவிற்கும் யாழ்ப்பாணத்திற்கும் அதிக கலாச்சாரத் தொடர்புகளை ஏற்படுத்திய அகராதி 1852 இல் வெளிவந்த மைரன் வின்ஸ்லோவின் தமிழ் – ஆங்கிலம் – தமிழ் அகராதி ஆகும்.

மாயாவாதத்துவம்ச கோளரி, அத்துவித சித்தாந்த மகோத்தாரணர், போலியருட்பாப் பிரபந்த நிர்க்கந்த கிஞ்சுக கண்டனப் பிரசண்ட மாருதம், சைவசித்தாந்த மகாசரபம், அட்ட அவதானம், சதாவதானம், சோடசாவதானம், அஷ்டதச அவதானம், நாவலர் போன்ற பட்டங்களைத் தன்புலமைத்திறத்தால் பெற்ற புலோலியூர் நா. கதிரவேற்பிள்ளை அவர்களின் தமிழ்ப்பேரகராதி (தமிழ் மொழியகராதி) 1899இல் வெளியானது. இதனை அடுத்து தமிழ்ச் சொல்லகராதி எனும் பெயரில், சொற்களின் தோற்றம் இலக்கிய ஆட்சி முதலியவை காட்டி யாழ்ப்பாணத்து கு. வைமன் கதிரவேற்பிள்ளை தொகுத்த அகராதி மதுரைத் தமிழ்ச்சங்கத்தால் 1904 இல் வெளியிடப்பட்டது. மூதறிஞர் ஆ.முத்துத்தம்பிப்பிள்ளை முதன்முதல் ஆங்கிலம் – ஆங்கிலம் – தமிழ் அகராதியை 1908இல் உருவாக்கி வெளியிட்டார். ஆங்கிலச் சொற்களை ஆங்கிலத்திலும் தமிழிலும் விளக்கம் கொடுத்த அருமையான அகராதி. இது சென்னைப் பேரகராதி உருவாக்கத்திற்கு துணைநூலாகப் பயன்பட்டது.

குமாரசுவாமிப் புலவர் (1853–1922) சூடாமணி நிகண்டையும் உரிச்சொல் நிகண்டையும் வெளியீடு செய்தார். இவர் இலக்கியச் சொல்லகராதியையும் 1914 இல் இயற்றினார். 1911 ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதி உருவாக்கும் குழுவில் ஒருவர் இலங்கையராக இருக்க வேண்டும் எனத் தீர்மானிக்கப்பட்டது. அகராதிப் பணியில் அறிஞர் ந.சி.கந்தையாபிள்ளை (1893–1967) அவர்களுக்கும் பெரும் பங்கு உண்டு. அவர் 1. செந்தமிழ் அகராதி. 2. தமிழ் இலக்கிய அகராதி. 3. தமிழ்ப் புலவர் அகராதி. 4. திருக்குறள் அகராதி. 5. காலக்குறிப்பு அகராதி என ஐந்து அகராதிகளைப் படைத்தார். பேராசிரியர் கலாநிதி ஆ. சதாசிவம் ஈழத்துப் பேச்சுத் தமிழ் அகரமுதலியை வெளியிட்டார். பேராசிரியர் கலாநிதி அல்லாமா ம. முகம்மது உவைஸ் தமிழ் – அரபு அகராதியை மதுரைப் பல்கலைக்கழக வெளியீடாக அமைத்தார்.

01) சந்திரசேகர பண்டிதர். சேனாதிராஜா முதலியார் மானிப்பாய் (யாழ்ப்பாண) அகராதி– 1842

02) மைரன் வின்ஸ்லோ யாழ் தமிழ் அறிஞர்கள் வின்ஸ்லோ ஆங்கிலம்– தமிழ் அகராதி – 1844

03) நா. கதிரவேற்பிள்ளை – தமிழ்ப் பேரகராதி (தமிழ் மொழியகராதி) – 1899

04) கு. கதிரவேற்பிள்ளை – தமிழ்ச் சொல்லகராதி – 1904

05) ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை–ஆங்கிலம் – ஆங்கிலம் – தமிழ் அகராதி – 1908

தமிழச் சொல்லகராதி ஆங்கிலம்

– தமிழ் அகராதி – தமிழ்ப்பேரகராதி

06) குமாரசுவாமிப் புலவர் – இலக்கியச் சொல்லகராதி – 1914

07) ந.சி. கந்தையாபிள்ளை – செந்தமிழ் அகராதி.

08) ந.சி. கந்தையாபிள்ளை – தமிழ் இலக்கிய அகராதி

09) ந.சி. கந்தையாபிள்ளை – தமிழ்ப் புலவர் அகராதி

10) ந.சி. கந்தையாபிள்ளை– திருக்குறள் அகராதி

11) ந.சி. கந்தையாபிள்ளை – காலக்குறிப்பு அகராதி

12)பேராசிரியர். கலாநிதி அல்லாமா ம. முகம்மது உவைஸ் – தமிழ் – அரபு அகராதி

- அறிவியல் தமிழின் தாயகம் ஈழம்

கல்வியைத் தாய்மொழி தமிழ்வழி கற்கக்கூடிய வாய்ப்பு வந்ததனால் அறிவியல் உருவாவதற்கும் வளர்வதற்கும் தேவை ஏற்பட்டது. இதன் நிமித்தம் நூல்கள் எழுதப்படலாயின. 1849ஆம் ஆண்டு பாலகணிதம், 1855 இல் இயற்கணிதம் எனும் நூல்கள் வெளிவந்தன. தமிழில் மருத்துவ நூலை அமெரிக்க ஈழத்து மருத்துவர் சாமுவேல் கிறீன் ஆக்கினார். இவர் ஈழத்தை அறிவியல் தமிழின் தாயகம் என்று சொல்லுமளவிற்கு பாரிய பங்களிப்புச் செய்தார். விபுலானந்தா பச்சையப்பன் கல்லூரியின் சொல்லாக்கக்கழகத்தின் பொதுத்தலைவராக வீற்றிருந்தார்.

– நியாய இலக்கணம் – நெவின்ஸ் சிதம்பரப்பிள்ளை– 1944

–அங்காதி பாதம் (Anatomy), சுகரணவாதம் (Physiology),

உடற்பாலனம் (Hygiene) – கிறீன் – 1852

இரண வைத்தயிம் (The Science and Art of Surgery) – கிறீன் – 1872

– மனுஷ அங்காதி பாதம் (Human Anatomy) – கிறீன்

– வைத்தியாகாரம் (The Principles and Practice of Medecine) – கிறீன்

– கலைச்சொல் தொகுதிகள் – Material medica and Pharmacy, ஆனை wifery, Diseases of woman and children, Medical Juris Prudence – கிறீன், சுவாமிநாதன், சாப்மன்– 1875

– வீச கணிதம் – கறோல் விசுவநாதபிள்ளை–1955

### ஈழத்தறிஞர் மீதான மறைமுக காழ்ப்புணர்ச்சி வெளிப்பாடுகள்

தமிழறிவுசார் புலமை உறவில் ஈழத்தறிஞர் பற்றிய செய்திகள் தென்னகத்தில் கவனிக்கப்படவில்லை என்ற குறை நிலவுகிறது. தமிழக அறிஞர்கள் சிலர் ஈழத்தறிஞர்கள் மீது அறியாமை அல்லது அழுக்காறு சார்புடைய சில இருட்டடிப்புகள், அசட்டைகள், அவமதிப்புகள் காலத்திற்குக் காலம் செய்த பல நிகழ்வுகளும் உண்டு..

இந்தியப் பல்கலைக்கழகத்து முதல் பீ.ஏ. பட்டதாரிகள் ஈழத்தவர்களே! இந்தியாவில் 1857 இல் நிறுவப்பட்ட முதல் மூன்று பல்கலைக்கழகங்களில் ஒன்றான சென்னைப் பல்கலைக்கழகத்தின் முதல் பீ.ஏ. (B.A.) பட்டதாரிகள் ஈழத்தவர்களான சி.வை. தாமோதரம்பிள்ளையும் கறோல் விசுவநாதபிள்ளையும் என்பது வரலாறு. அறிஞர் ச.வைத்தியம்பிள்ளை சிந்தாமணி நிகண்டை 1876 –77 காலப்பகுதியில் இயற்றினார்.

1) இராவ்பகதூர். சி.வை.தாமோதரம் பிள்ளையவர்களுக்குக் கிடைத்த பெருமைகளைப் பொறுக்க முடியாத ஒருவர் யாழ்ப்பாணத்தமிழையும் யாழ்ப்பாணமக்களையும் இழிவுபடுத்தி ஓர் உபாத்தியாயர் எழுதினார். அதனைப் பொறுக்கமுடியாத ஆறுமுகநாவலர், அந்த உபாத்தியாயருக்கு – நீர் இலக்கணம் சரியாகத்தெரியாத மகானுபவர். மாதம் ஐம்பது ரூபாய் சம்பளம்பெற்றுத் தலைமைத் தமிழ்ப்புலமை நடாத்தும் பாடசாலையில் நான்காம் உபாத்தியாயராயிருக்கவும் யோக்கியரல்லரென்று தள்ளப்பட்ட நீரா, சிறிதும் நாணாது தலைநிமிர்ந்து, வித்தியா பண்டித பட்டம் பெற்ற ஸ்ரீதாமோதரம் பிள்ளை விளம்பரத்திற் பிழைகாட்ட வல்லீர்!; என்று பதில் கொடுத்தார்.

(தமிழ்நாடும் ஈழத்துச் தமிழ்ச்சான்றோரும் பக்கம் : 45)

2) சென்னைப் பல்கலைக்கழக பி.ஏ.பட்டதாரியான கெலக் விசுவநாதபிள்ளை (1825–1888) பின்னர், அப்பல்கலைக் கழகத்தின் தேர்வு மதிப்பாளராகக் கடமை ஆற்றினார். சென்னை அரசின் க ல் வி த் தி ை ண க் க ள த் தி ே ல மொழிபெயர்ப்பாளராக நியமிக்கப்பட்ட கெலெக்கிடம் பாடசாலைகளுக்கான பாடநூல்களை ஆக்கும் பணி ஒப்படைக்கப்பட்டிருந்தது. ஆங்கிலத்தில் எழுதப்பட்ட பாடநூல்களை தமிழில் மொழிபெயர்க்குமாறும் பணிக்கப்பட்டிருந்தார். கெலெக் ஆக்கிய பாடநூல்கள் சென்னை மாகாணம் முழுவதும் அரசாங்கப் பாடசாலைகளில் பயன்படுத்தப்பட்டுப் பெரும் வரவேற்பைப் பெற்றன. அறிஞர்கள் பலர் பாராட்ட சில அறிஞர்கள், அவரின் பாடநூல்களில் தவறுகள் இருப்பதாக விதண்டாவாதமாகக் கண்டனப் பிரசுரங்களை வெளியிட்டார்கள்.

அவற்றிற்குக் கண்டிப்புத் தெரிவிப்பதற்காக 'நல்லறிவுச் சுடர் கொளுத்தல்' எனும் பிரசுரத்தை 1868 இல் ஆறுமுகநாவலர் வெளியிட்டார் 'இங்கிலீசினின்றுந் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுப் பாடசாலைகளெங்குந் தமிழ்ப்புத்தகங்களுக்கு ஆசிரியராகிய விசுவநாத பிள்ளை யாழ்ப்பாணத்தவர், மதுரைச்சங்கத்தும், புதுவைச் சங்கத்தும், சென்னைச்சங்கத்தும் தமிழ்த் தலைமைப்புலமை நடாத்திய களத்தூர் வேதகிரி முதலியார், உதயதாரகைப் பத்திரிகை வாயிலாக வெளிப்படுத்திய யாழ்ப்பாணச் சிறப்பு; என்னும் கடிதத்தில் பிற பாஷை கலவாது சுத்தச் செந்தமிழ் பேசுவோர் யாழ்ப்பாணத்தார்களே யெனவும், மற்றைத் தேசத்தார்களெல்லோரும் தமிழோடு பல பாஷையுங் கலந்து பேசுகின்றார்களெனவும் கூறியிருக்கிறார்; –

(தமிழ்நாடும் ஈழத்துச் தமிழ்ச்சான்றோரும் பக்கம் : 54)

3) கும்பகோணம் உயர்பாடசாலையில் தமிழ்ப்பண்டிதராக முருகேசு பண்டிதர் பணியாற்றிக் கொண்டிருந்த காலத்தில், அங்குத் தலைமைத் தமிழ்ப் பண்டிதராகக் கடமையாற்றிவந்த டாக்டர். உ.வே. சாமிநாதையர் அவர்களால் சீவகசிந்தாமணி என்னும் காப்பியநூல் 1887 இல் பதிப்பித்து வெளியிடப்பட்டது. அதனைப் பார்வை இட்ட முருகேசு பண்டிதர், அதிற் காணப்பட்ட பிழைகளைத் தொகுத்து, அவை ஏன் பிழைகள் என்பதற்கான காரணங்களையும் கொடுத்து, 'சீவக சிந்தாமணி வழுப்பிரகரணம்' என்னும் நூலினை வெளியிட்டார். அதனை அறிந்த உ.வே.சா. அவர்கள் தமது மாணாக்கருள் ஒருவரான குடவயல் சண்முகம் பிள்ளை என்பவரைக் கொண்டு முருகேசப் பண்டிதரின் கண்டனங்களுக்கு ஒரு மறுப்புப் பிரசுரத்தை வெளியிடச்செய்தார். இம்மறுப்பினை அடுத்து, உ.வே.சா.வையும் அவரது மாணாக்கரையும் ஒரு பொதுமேடையில் விவாதிப்பதற்கு வருமாறு பண்டிதர் அழைப்பு விடுத்தார். அந்த அழைப்புக்கு இருவரில் எவரும் போகவில்லை. ஆனால் இரண்டாவது பதிப்பில் பண்டிதர் சுட்டிய பிழைகள் திருத்தப்பட்டிருந்தன.

இது தொடர்பாக, உ.வே.சா.வின் பண்புகள் பற்றி பேராசிரியர் எஸ்.வையாபுரிப்பிள்ளை அவர்கள் '... கண்டன பிரசுரங்களும் ஐயருக்கு நன்மையாகவே முடிந்தன. தாம் நூற் பரிசோதனை செய்தது போதாது என்பதனை நன்கு உணர்ந்தனர். இன்னும் மிகநுட்பமாக ஆராய வேண்டும் என்பதனைக் கண்டனர். இப்பிரசுரங்களில் தமக்குச் சரியெனத் தோன்றியவற்றைத் தமது பிற்பதிப்புகளில் உடன்பட்டுக் கொள்ளலாயினர்' தாம் எழுதிய தமிழ்ச்சுடர்மணிகள் எனும் நூலில் குறிப்பிட்டிருந்தார்.– (தமிழ்நாடும் ஈழத்துச் தமிழ்ச்சான்றோரும் பக்கம் : 82)

4)அ.முத்துத்தம்பிப் பிள்ளையின் கலைக்களஞ்சியப் பணி சரியான முறையில் ஆவணப் படுத்தப்படவில்லை என்ற குறையும் காணப்படுகிறது. அவருடைய வரலாறு கூறும் சிறுநூலின் பதிப்புரையில் பின்வரும் செய்தி பொறிக்கப்பட்டுள்ளது.

'ஈழத்தமிழகத்தில் தோன்றிய தமிழகப் புகழாளர்களை நாம் நினைவுகூர மறந்துவிட்ட காரணத்தால் அவர்களுடைய பணிகளையும் அவர்களையுமே உலகு மறக்க நேர்ந்துள்ளது. இதற்குப் பிள்ளையவர்களும் விதிவிலக்கல்ல. தமிழில் கலைக்களஞ்சியம் ஒன்றைத் தந்த முதல்வர் என்ற பெருமைக்குரியவர். எனினும் இந்த உண்மையைப் பலர் மறந்து விட்டனர். சென்னைத் தமிழ்வளர்ச்சிக் கழகம் வெளியிட்ட கலைக்களஞ்சியம் முதலாந் தொகுதியில் சென்னைப் பச்சையப்பன் கலாசாலைத்தமிழாசிரியர்திரு.ஆ.சிங்காரவேலு முதலியார் எழுதி வெளியிட்ட அபிதான சிந்தாமணியே முதன் முதலில் வெளிவந்த கலைக்களஞ்சியம் என்ற குறிப்புக் காணப்படுகிறது. இஃது உண்மைகளுக்குப் புறம்பானது. ஆ.முத்துத்தம்பி 1886இல் அபிதானகோசம் என்ற கலைக்களஞ்சியத்தை எழுதத் தொடங்கி 1902இல் அதனை அச்சிட்டு

வெளியிட்டார் என்பது முகவுரை மூலம் பெறப்படுகிறது".– (அயலகத் தமிழ்கலை, இலக்கியம், சமகாலச் செல்நெறிகள். – உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பக்கம் 27).

(குறிப்பு : 'இந்நூல் இவ்வாறு ஒருவாறு முற்றுப் பெற்றபின், இதனைச் சென்னையிலிருந்த பிரபுக்கள் சிலரிடம் காட்டினேன். 'அவர்கள் இத்தகைய நூல் தமிழிற் கின்றியமையாததே: அதனை வெளியிடுக' என்றனரேயன்றி யதனை யச்சிட்டு வெளிப்படுத்த ஒன்றும் கூறிற்றிலர்.

பின்பு யாழ்ப்பாணம் கே.எஸ்.எஸ். ஸ்ரீ கனகசபைப்பிள்ளை, பி.ஏ., பி.எல்., அவர்களிடம் இதின் ஒருபாகத்தைக் காட்டினேன். அவர் இஃது அரிய தமிழ்க்கதை அகராதி இதனைச் சென்னையிலுள்ளார் ஆதரிக்க வேண்டுமென ஒரு பத்திரம் எழுதித்தந்தனர்..... முகவுரை – அபிதான சிந்தாமணி)

5) ஈழநாட்டில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் எழுந்த நூல்களுள் சைமன் காசிச்செட்டி (1807 – 1860) எழுதிய 'தமிழ் புளூராக்' (Tamil Plutarch), அ.சதாசிவம்பிள்ளையால் இயற்றப்பெற்ற 'பாவலர் சரித்திர தீபகம்' (1886), வே.கனகரத்தின உபாத்தியாயர் எழுதிய ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் சரித்திரம்' (1882) என்பன குறிப்பிடத்தக்கன. இம்மூன்று நூல்களும் தமிழ் இலக்கிய வரலாற்றிலும், வாழ்க்கை வரலாற்று இலக்கிய வரலாற்றிலும் முக்கிய இடத்தைப் பிடிக்கும் நூல்களாக அமைந்துள்ளன. வாழ்க்கை வரலாற்று இலக்கியத்தின் முன்னோடிகளாகவும் பரந்த பார்வையும் ஆழமான நோக்குமுடைய நூல்களாகவும் இவை விளங்குகின்றன. தமிழ் இலக்கிய வரலாற்றில் வாழ்க்கை இலக்கிய வகையில் அமையும் தமிழ்ப் புலவர் சரித்திரத்தை ஆங்கிலத்தில் முதன் முதல் எழுதி வெளியிட்ட பெருமை சைமன் காசிச் செட்டியாரைச் சாரும். மணியகாரர், முதலியார், நீதிபதி முதலான பதவிகளை வகித்த காசிச்செட்டி அவர்கள் சிலாபத்தைப் பிறப்பிடமாகக் கொண்டவர். இவர் தம்நூலில் 196 புலவர்கள் பற்றி குறிப்பிட்டுள்ளார்.

நவாலியில் பிறந்து, வட்டுக்கோட்டைச் செமினறியில் கல்விபயின்று, 1857 இலிருந்து உதயதாரகை பத்திரிகை ஆசிரியராகவும், யாழ்ப்பாணத்தில் பலபகுதிகளில் ஆசிரியராகவும் இருந்த அ.சதாசிவம்பிள்ளை (1820–1895) நாவலருடனும் பீற்றர் பேர்சிவலுடனும் விவிலிய தமிழ் மொழிபெயர்ப்பு அங்கீகாரம் பெற தமிழ்நாட்டுக்குச் சென்றவர். இவர் 1886 இல் "பாவலர் சரித்திர தீபகம்" எனும் நூலில் 410 புலவர்களின் சுருக்க வரலாற்றை எழுதினார். இந்த 410 புலவர்களில் 328 தமிழ்நாட்டுப் புலவர்களும் 82 ஈழநாட்டுப் புலவர்களும் அடங்குவர். இது தமிழில் பின்னெழுந்த தமிழ்ப்புலவர் சரிதைகள் அனத்துக்கும் முன்னோடியானதாகவும், தமிழில் எழுந்த முதல் தமிழ்ப்புலவர் வரலாறு என்ற வகையிலும் வரலாற்றில் முதன்மையும் முக்கியமும் பெற்றது.
வே. கனகரத்தின உபாத்தியாயர் எழுதிய "ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் சரித்திரம்" முழுமையான வாழ்க்கை வரலாற்று இலக்கியம் என்ற வகையில் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நூலாக அமைகிறது.

('ஒரு மனிதனின் பிறப்பு, நிகழ்வு, இறப்பு என்னும் மூன்று புள்ளிகளைத் தாண்டிச் செல்லும்பொழுது அவன் தனக்காகவும் சமுதாயத்திற்காகவும் ஆற்றிய பணிகளை உலகிற்குப் புலப்படுத்தும் அதே வேளையில் சமுதாயத்திலிருந்து அவனைப் போன்றோரை உருவாக்கும் வகையில் கலைப்படைப்பாகப் படைக்கப்படும் நூலினை வாழ்க்கை வரலாற்று இலக்கியம் என்று குறிப்பிடலாம்.)

தமிழில் வாழ்க்கை வரலாற்று இலக்கியத்தை ஆய்வு செய்த முனைவர் சாலினி இளந்திரையன், '19ஆம் நூற்றாண்டில் எழுந்த வாழ்க்கை வரலாற்று இலக்கியங்கள் பெரிதும் சமயச் சார்புடையனவாக அமைந்து, புனைந்துரைகளை மிகுதியாக உடையதனால் அவற்றை வாழ்க்கை வரலாற்றுக்குப் பொருத்தமான முழுமையான வாழ்க்கை வரலாறுகளாகக் கொள்வதற்கில்லையெனத் துணிந்து குறிப்பிடுவதோடு 20ஆம் நூற்றாண்டு பிறந்தவுடனேயே தமிழ் வாழ்க்கை வரலாற்று இலக்கியத்துக்கும் ஒரு முழுமை கிடைத்து விட்டது என ஆராய்ந்து குறிப்பிடுவார். இதற்கு எடுத்துக்காட்டாக, கா.ச. துரைச்சாமி எழுதிய 'தென்னாட்டுச் சிரேட்டர்கள்', என்ற நூலையும், டீ.ஏ. எழுதிய சி.வை. 'தாமோதரம் பிள்ளையவர்கள் சரித்திரம்' (1902) என்ற நூலையும் எடுத்துக்காட்டுவர். அம்மையார் அவர்களுக்கு மேற்காட்டிய நூல்கள் கிடைக்காமல் விட்டிருக்கலாம் என்று நாம் நினைப்பது தவறென்றே உணரவேண்டியுள்ளது. இதற்குப் பிரதேச வேறுபாடோ, கௌரவ இழப்போ காரணமாக அமையலாம் போலத் தோன்றுகிறது. – (தமிழ்மொழி வாழ்க்கை வரலாற்று இலக்கியத்தில் வே. கனகரத்தின

உபாத்தியாயரின் 'ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் சரித்திரம்' ( 1882) பெறும் முக்கியத்துவம். பக்கம்:88)

### செந்தமிழ் வளர்த்த ஈழத்துப்பாவலர்கள்

சங்ககாலம் தொட்டு இருபதாம் நூற்றாண்டு வரை வாழ்ந்த பாவலர்கள் பட்டியல் (அகர வரிசை)

அட்டவணை –2

ஈழத்து இஸ்லாம் மக்களிடையே இலக்கிய முயற்சிகளின் கொடுமுடியாக விளங்கியவர் அப்துல் காதிர் புலவர். தனது ஐம்பத்திரண்டு வயதிற்குள் முப்பதுக்கு மேற்பட்ட நூல்களை எழுதிக் குவித்த புலவரின் சந்தத் திருப்புகழ் பெரும் பாராட்டுதலைப் பெற்றது.

“அத்துவி தத்தின் சோதி

யடங்கலு மாகி வெண்மை

முத்துரு வாகி மஞ்ஞை

முதமறைக் கனியாய்க் கிந்தீல்

சித்துரு வாகி ஆதம்

சிரத்தொளி வரி யார்க்கும்

முத்தியின் வித்தாய் நின்ற

முகம்மது நபியுல் லாவே."

வரலாற்றுச் செயற்பாடுகள் என்பன வெறும் சம்பவங்கள் அல்ல. அவற்றுக்கு ஓர் உட்புறம், அதாவது ஒரு சிந்தனைப்புறம் உள்ளது. – R.C. Kollinwood.

### ஆதார நூல்கள் :


ஆ.சதாசிவம்பிள்ளை. பாவலர் சரித்திர தீபகம் Asian Educational Services. 2004.

ந.கடிகாசலம், ச.சிவகாமி. அயலகத்தமிழ் தமிழ்க்கலை, இலக்கியம், சமகாலச் செல்நெறிகள். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். 2001.

இரா. இளங்குமரனார். ஈழம் தந்த இனிய தமிழ்கொடை. தமிழ்மண் பதிப்பகம். 2005. 06. தமிழ்ப்பிரியன் எம்.ஏ. இருநூற்றாண்டுகளும் 50 தமிழ் அறிஞர்களும். நர்மதா. 2005.

த.துரைசிங்கம். தமிழ் இலக்கியக் களஞ்சியம். உமா பதிப்பகம். 2008.

த.துரைசிங்கம். பைந்தமிழ் வளர்த்த ஈழத்துப் பாவலர்கள். உமா பதிப்பகம். 2005.

க.செபரத்தினம். தமிழ்நாடும் ஈழத்துத் தமிழ்ச் சான்றோரும் மணிமேகலைப் பிரசுரம் 2005.

மு.வரதராசன். தமிழ் இலக்கிய வரலாறு. சாகித்திய அகாதெமி. 1972.

எஸ். எஸ். ஆனந்தன். க.பொ.த.(உ.ஃதி) தமிழ்வழி.

கா.சிவத்தம்பி, ச.சிவகாமி, இராம. குருநாதன். உலகத் தமிழிலக்கிய வரலாறு. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். 2005.

எஸ்.ஜேபநேசன். – பத்தொன்பதாம் நூற்றாண்டில் தென்னிந்திய யாழ்ப்பாணக் கல்வி கலாச்சார ஊடாட்டம்.

இரா.வை.கனகரத்தினம் – தமிழ்மொழி வாழ்க்கை வரலாற்று இலக்கியத்தில் வே. கனகரத்தின உபாத்தியாயரின் 'ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் சரித்திரம் (1882) பெறும் முக்கியத்துவம்.

நா.சுப்பிரமணியன். – கலாநிதி க.கைலாசபதியின் ஆய்வு நோக்கு

க. கைலாசபதி. ஈழத்து இலக்கிய முன்னோடிகள். மக்கள் வெளியீடு. 1986

இரசிகமணி. கனகசெந்திநாதன். ஈழத்து இலக்கிய வளர்ச்சி. மித்ரா வெளியீடு. 2000.

Thangaratnam Muttucumaraswamy. B.A.(U.K.). Two Eminent Tamil Scholars of Jaffna and their links with Tamilnadu in General, and in Particular with The Madurai Tamil Sangam during the First Quarter of the 20th Century : Kumaraswamy Pulavar (1853 – 1922) and A. Mootootambipillai (1858 – 1917) of Ceylonese to the Development

P. Poologasingham. The Contributions of Tamil in the Nineteenth Century.

முத்துக்கவிராசர் – கைலாய மாலை

கவிராசவதோயன் – கோணேசர் கல்வெட்டு

ஆறுமுகநாவலர் – மேலே காண்க

சைமன் காசிச்செட்டி – சிலோன் கசெற்றியர், தமிழ் புளுராக்

கணேசையர் – தொல்காப்பிய உரை

# அட்டவணை – 1

| ஆண்டு | ஆசிரியர் | நூல் / கட்டுரை |
|---|---|---|
| 1859 | சைமன் காசிச்செட்டி | Tamil Plutarch |
| 1886 | ஆர்ணோல்ட் சதாசிவம்பிள்ளை | பாவலர் சரித்திர தீபகம் |
| 1916 | அ.குமாரசாமிப் புலவர் | தமிழ்ப்புலவர் சரித்திரம் |
| 1922 | ஆ.முத்துத்தம்பிப்பிள்ள | ஈழமண்டலப் புலவர் சரித்திரம் |
| 1939 | சி.கணேசையர் | ஈழநாட்டுத் தமிழ்ப் புலவர் சரித்திரம் |
| 1951 | வி.செல்வநாயகம் | தமிழ் இலக்கிய வரலாறு |
| 1959 | க.பொ. இரத்தினம் | இலங்கையில் இன்பத்தமிழ் |
| 1964 | கனக - செந்திநாதன் | ஈழத்து இலக்கிய வளர்ச்சி |
| 1967 | மு.கணபதிப்பிள்ளை | ஈழநாட்டின் தமிழ்ச்சுடர் மணிகள் |
| 1986 | க. கைலாசபதி | ஈழத்து இலக்கிய முன்னோடிகள் |
| 1978 | கா. சிவத்தம்பி | ஈழத்தில் தமிழ் இலக்கியம் |
| 1979 | சி.மௌனகுரு, எம்.ஏ.நுஃமான், திருமதி.சித்திரலேகா | இருபதாம் நூற்றாண்டு ஈழத்துத் தமிழ் இலக்கியம் |
| 1997 | சி.தில்லைநாதன் | இலங்கைத் தமிழ் இலக்கியம் |
| 1997 | க.செ. நடராசா | ஈழத்துத் தமிழ் இலக்கிய வளர்ச்சி |
| | பொ.பூலோகசிங்கம் | தமிழ் இலக்கியத்தில் ஈழத்தறிஞர்களின் பெருமுயற்சிகள் |
| | துரை.மனோகரன் | இலங்கையில் தமிழ் இலக்கிய வளர்ச்சி |
| | க.வேலுப்பிள்ளை | தொடக்க கால ஈழத்து இலக்கியங்களும் அவற்றின் வரலாற்றுப் பின்னணியும் |
| 2002 | க. செபரத்தினம் | ஈழத்துச் தமிழ்ச் சான்றோர் |
| 2005 | க. செபரத்தினம் | தமிழ்நாடும் ஈழத்துச் தமிழ்ச் சான்றோரும் |
| 2005 | இரா. இளங்குமரனார் | ஈழம் தந்த இனிய தமிழ்கொடை |
| 2002 | க. செபரத்தினம் | ஈழத்துச் தமிழ்ச் சான்றோர் |
| 2005 | க. செபரத்தினம் | தமிழ்நாடும்ஈழத்துச் தமிழ்ச் சான்றோரும் |
| 2005 | இரா. இளங்குமரனார் | ஈழம் தந்த இனிய தமிழ்கொடை |
| | க.சி. குலரத்தினம் | தமிழ் தந்த தாதாக்கள் |

## அட்டவணை – 2

| எண் | பெயர் | ஊர் | காலம் |
|---|---|---|---|
| 01 | அகிலேசபிள்ளை | திருக்கோணமலை | 1853 – 1910 |
| 02 | அசனாலெப்பை | யாழ்ப்பாணம் | 1870 – 1918 |
| 03 | அப்துல்காதிறுப்புலவர் | தெல்தோட்டை | 1866 – 1918 |
| 04 | அப்துல்லாப் புலவர் | யாழ்ப்பாணம் | ----------- |
| 05 | அரசகேசரி | நல்லூர் | ----------- |
| 06 | அம்பலவாண நாவலர் | சித்தன்கேணி | 1855 – 1932 |
| 07 | அம்பிகை பாகர் | இணுவில் | 1854 – 1904 |
| 08 | அப்பாச்சாமி ஐயர் | ----------- | ----------- |
| 09 | அப்துல் ரகுமான் | நாவலப்பிட்டி | 1846 – 1920 |
| 10 | அப்புக்குட்டி ஐயர் | யாழ்ப்பாணம் | 1788 – 1863 |
| 11 | அகமது குட்டிப்புலவர் | காத்தான்குடி | ----------- |
| 12 | ஏரம்பையர் | மாதகல் | 1847 – 1914 |
| 13 | கரைசைப் புலவர் | கரைசை | ----------- |
| 14 | கவிராசர் | திருக்கோணமலை | ----------- |
| 15 | கனகசபைப் புலவர் | அளவெட்டி | 1829 – 1973 |
| 16 | கார்த்திகேயப் புலவர் | காரைநகர் | 1819 – 1898 |
| 17 | காசிநாதப் புலவர் | அச்சுவேலி | 1796 – 1854 |
| 18 | குமாரசுவாமிப் புலவர். அ | சுன்னாகம் | 1855 – 1922 |
| 19 | குமாரசுவாமிப் புலவர். வ | புலோலி | ----- – 1925 |
| 20 | குமாரசுவாமி முதலியார் | வல்வெட்டி | 1791 – 1874 |
| 21 | கூழங்கைத்தம்பிரான் | யாழ்ப்பாணம் | 1699 – 1795 |
| 22 | சபாபதி நாவலர் | வடகோவை | 1843 – 1903 |
| 23 | சரவணமுத்துப்பிள்ளை | திருக்கோணமலை | ----------- |
| 24 | சரவணமுத்துப் புலவர் | நல்லூர் | ----- – 1845 |
| 25 | சிற்றம்பலப் புலவர் | மாதகல் | ----------- |
| 26 | சிவசம்புப் புலவர் | உடுப்பிட்டி | 1852 – 1910 |
| 27 | சிவானந்தையர் வித்வான் | தெல்லிப்பளை | 1873 – 1916 |
| 28 | சின்னக்குட்டிப் புலவர் | மாவிட்டபுரம் | ----- – 1815 |
| 29 | சின்னத்தம்பிப் புலவர் | இணுவில் | ----- – 1760 |
| 30 | சின்னத்தம்பிப் புலவர் | நல்லூர் | 1716 – 1780 |
| 31 | சுலைமான் லெப்பைப் புலவர் | யாழ்ப்பாணம் | ----------- |
| 32 | சுப்பையனார் புலவர் | வண்ணார்பண்ணை | ----------- |
| 33 | சூசைப்பிள்ளை மதுரகவிப்புலவர் | மாதகல் | 1877 – 1955 |
| 34 | செகராசசேகரன் | சிங்கை | 1380 – 1414 |
| 35 | செய்கு அலாவுதீன் புலவர் | புத்தளம் | 1890 – 1938 |

| | | | |
|---|---|---|---|
| 36 | சேனாதிராச முதலியார் | இருபாலை | 1750 - 1840 |
| 37 | சோமசன்மா | சிங்கை | ---------- |
| 38 | சோமசுந்தரப்புலவர் | நவாலி | 1878 - 1953 |
| 39 | தம்பிமுத்துப்புலவர் | அச்சுவேலி | 1857 - 1937 |
| 40 | தில்லைநாதப் புலவர் | சரவணை | ----------- |
| 41 | துரையப்பாப்பிள்ளை பாவலர் | தெல்லிப்பளை | 1872 - 1929 |
| 42 | தொம்பிலிப்பு | தெல்லிப்பளை | ----------- |
| 43 | நமச்சியவாயப் புலவர் | அச்சுவேலி | 1749 - ----- |
| 44 | நமச்சியவாயப் புலவர் | மல்லாகம் | 1860 - 1942 |
| 45 | நல்லதம்பி முதுதமிழ்ப்புலவர் | வட்டுக்கோட்டை | 1896 - 1951 |
| 46 | நவநீதகிருஷ்ணபாரதியார் | மாவிட்டபுரம் | 1889 - 1954 |
| 47 | நாகமணிப் புலவர் | நயினாதீவு | 1891 - 1933 |
| 48 | நாகமுத்துப் புலவர் | காரைநகர் | 1857 - 1939 |
| 49 | பக்கீர் புலவர் | எருக்கலம்பிட்டி | 1862 - 1917 |
| 50 | பண்டிதராசர் | திருக்கோணமலை | ----------- |
| 51 | பரமானந்தப் புலவர் | நல்லூர் | ----------- |
| 52 | பரராசசேகரன் | நல்லூர் | 1478 - 1519 |
| 53 | பதுருதீன் புலவர் | யாழ்ப்பாணம் | ----------- |
| 54 | பீதாம்பரப் புலவர் | நீர்வேலி | ------ - 1819 |
| 55 | பூதந்தேவனார் | ஈழம் | கி.பி. 130 |
| 56 | பூலோகசிங்க முதலியார் | தெல்லிப்பழை | ----------- |
| 57 | பூபாலபிள்ளை. சு. | புளியந்தீவு | 1855 - 1920 |
| 58 | பெரியதம்பிப்பிள்ளை | புலவர்மணி | ----------- |
| 59 | பேதுருப்புலவர் | தெல்லிப்பழை | 1647 - ----- |
| 60 | பேரம்பலப் புலவர் | வேலணை | 1859 - 1935 |
| 61 | போசராச பண்டிதர் | தம்பதெனியா | ----- - 1310 |
| 62 | மயில்வாகனப் புலவர் | மாதகல் | 1779 - 1816 |
| 63 | மயில்வாகனப் புலவர் | வறுத்தலைவிளான் | 1875 - 1918 |
| 64 | முத்துக்குமார கவிராசர் | சுன்னாகம் | 1780 - 1851 |
| 65 | முத்துக்குமாரப் புலவர் | அராலி | ----- - 1827 |
| 66 | முத்துராச கவிராசர் | நல்லூர் | ---------- |
| 67 | வரதபண்டிதர் | சுன்னாகம் | 1656 - 1716 |
| 68 | வேலுப்பிள்ளை ஆசுகவி | வயாவிளான் | 1860 - 1944 |
| 69 | வீரக்கோன் முதலியார் | தம்பலகாமம் | 1686 - ------ |
| 70 | வையா | யாழ்ப்பாணம் | ---------- |

# சிட்டு

முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



"சிட்டுக்குருவி சிட்டுக்குருவி
சேதி தெரியுமா
என்னை விட்டுப் பிரிஞ்சு
போன கணவர்
வீடு திரும்பல"
(திரைப்பாடல்: கவி கா.மு.செரீபு.)

*******

சில் – சில்லு, சில்லுக்கோடு – ஒரு விளையாட்டு.

சில் – சிறிய, சின்ன, சின்மை, சிறுமை.

"வையை அன்ன வழக்குடை வாயில்,
வகை பெற எழுந்து வானம் மூழ்கி,
சில்காற்று இசைக்கும் பல் புழை நல் இல்,
யாறு கிடந்தன்ன அகல் நெடுந் தெருவில்"
(மதுரைக் காஞ்சி).

சில்காற்று – சிறிய அளவில் மெல்லென வீசும் தென்றல் காற்று.

இப்போது, "இளங் காத்து வீசுதே".

சிறு – சிற்றம்.

"சிற்றம் சிறுகாலே வந்துன்னைச் சேவித்துன்
பொற்றா மரையடியே போற்றும் பொருள் கேளாய்;"
(திருப்பாவை).

சிற்றம் – சிறிய. சின்னஞ்சிறு என்பதைப் போலச் சிற்றஞ்சிறு.

சிற்றஞ்சிறு காலை – சிறிய பொழுதான விடியற்காலை.

ஆங்கிலத்திலும் விடியற்காலைப் பொழுதை small hours என்பர்.

["In the wee small hours of the morning
While the whole wide world is fast asleep
You lie awake and think about the girl
And never even think of counting sheep"
a lyric by Frank Sinatra]

சில் > சிள்;

சிள்வண்டு = (சிறிய வண்டு) – துண்டு துண்டாக ஒலியெழுப்பும் சுவர்க்கோழி.

சிள் – சிட்டு = சிறிய; சிட்டுக்குருவி = சிறிய குருவி.

இது ஊர்க்குருவி, சிட்டாங்குருவி, சிய்யாங்குருவி என்றும்கூட அழைக்கப்படுகிறது.

அழிந்துவரும் இவற்றைக் காக்க, விழிப்புணர்வு ஏற்படுத்த உலகச் சிட்டுக்குருவி நாளும் கொண்டாடப்படுகிறது.

(வள் + து = வட்டு; சிள் + து = சிட்டு.)

"உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்
சூன்முதிர் பேடைக் கீனி லிழைஇயர்"
(குறுந்தொகை 85).

வீட்டு இறைவாணத்தில் தங்கும் சிட்டுக்குருவி –

"உள்ளிறைக் குரீஇக் காரணற் சேவல்"
(நற்றிணை 181)

திக்குக்கெட் டொட்டுச் சிட்டென
பட்டத்துற் புத்திக் கட்டற
செப்பத்துற் பற்றற் கற்புத ..... மருள்வாயே
(திருப்புகழ்).

"விட்டு விடுதலையாகி நிற்பாய் இந்தச்
சிட்டுக் குருவியினைப் போலே"
(பாரதியார் ),

சிட்டு – சிட்டை.

சிட்டை = கடைகளில் கணக்கு எழுதப் பயன்படுத்தும் சிறிய சுவடி.

சிட்டு – சிட்டை.

சிட்டை – பஞ்சை நூல் நூற்கத் தோதாக உருட்டிப் பட்டையடித்து வைப்பது.

சிட்டம் – பஞ்சிலிருந்து நூல் நூற்று அதைச் சிறிய அளவில் சுற்றிவைப்பது. 1680 முழம் நீள நூலை மூன்று முழ அளவில் சுற்றிவைப்பர். இதற்குப் பயன்படும் நெசவுத்தொழிற் கருவியும் சிட்டம் எனப்படும்.

படம் என்னும் பொருள் தரும் picture என்னும் ஆங்கிலச் சொல்லை pic எனச் சுருக்கி, அதை pix எனத் திரித்து, அதனுடன் element என்பதன் முதல் அசை el ஐச் சேர்த்து, pixel என்ற சொல்லை உருவாக்கிப், படத்தின் மிக நுண்ணிய பகுதியைக் குறித்தனர்.

pixel என்பது படத்துணுக்கு, படச்சில்லு, படச்சிள்ளு என்று தமிழில் மொழிபெயர்க்கப்படுகிறது.

சிறிய குறிப்பு அல்லது குறிப்புரை அல்லது கடிதம் எழுதுவது சிட்டு எழுதுவது எனப்பட்டுப் பின்னர்ச் சீட்டு ஆகியிருக்கலாம்.

சீட்டுக் கவி, குடவோலைச் சீட்டு, திருவுளச் சீட்டு என்ற வழக்குகள் உண்டு.

சிறிய என்னும் பொருள் தரும் சிட்டு ஆங்கிலத்தில் chit எனப்படுகிறது. இதன் வேர் மூலம் தெரியவில்லை என்றும் இந்தியாகலாம் என்றும் கூறப்படுகிறது. சிறிய அளவில் பேசிக்கொள்வதும் chit–chat எனப்படும்.

இவ்வாறே சிறிய என்ற பொருள் தரும் குட்டி என்னும் சொல்லுடன் kid, kitty, kitten... போன்றவை ஒருங்குவைத்து எண்ணப்படலாம்.

chit (n.1)

"a short letter, note," 1776, short for chitty (1690s), from Mahrati (Hindi) chitthi "letter, note, memorandum," from Sanskrit chitra–s "distinctively marked" (see cheetah).

chit (n.2)

"small child," 1620s, originally "young of an animal" (late 14c.), of uncertain origin; perhaps a playful deformation of kitten, but Middle English Compendium compares Old High German kizzin "kid" and Century Dictionary mentions Old English cið "a shoot, sprout,sprig"

# இருபதைத் தாண்டும் தமிழ் விக்கிப்பீடியா

நீச்சல்காரன்

நாள்: 04.10.2023




உலகின் பிரபலமான இணையதளங்களாக கூகுள், ஃபேஸ்புக், எக்ஸ் (டிவிட்டர்) தளங்களை அடுத்து விக்கிப்பீடியா உள்ளது. இணையத்தில் வேடிக்கை பார்ப்பவர் முதல் வேலை பார்ப்பவர் வரை தவிர்க்க முடியாத ஓர் இணையதளம் என்றால், அது விக்கிப்பீடியாதான். தற்போது இருபது ஆண்டுகளை நிறைவுசெய்துள்ள விக்கிப்பீடியாவின் தமிழ்ப் பதிப்பு, தமிழ் வளர்ச்சிக்கு மட்டுமல்ல... அறிவுப் புரட்சிக்கும் வித்திட்டுள்ளது.

2003 செப்டம்பர் 30 அன்று தமிழில் விக்கிப்பீடியா தொடங்கப்பட்டது. உலக அளவில், கட்டுரை எண்ணிக்கையின் அடிப்படையில் (1.57 இலட்சம்) 62ஆம் இடத்திலும், பயனர் எண்ணிக்கையின் அடிப்படையில் (2.2 இலட்சம்) 41ஆம் இடத்திலும் தமிழ் விக்கிப்பீடியா உள்ளது. இந்திய அளவில் உருது (1.95 இலட்சம்), இந்தி (1.59 இலட்சம்), அதற்கடுத்து தமிழ் மூன்றாவது இடத்தில் உள்ளது.

சிங்கள மொழியில் 20 ஆயிரம் கட்டுரைகளுக்குக் குறைவாகவும், கன்னட மொழியில் சுமார் 30 ஆயிரம் கட்டுரைகளும், மலையாளத்தில் சுமார் 85 ஆயிரமும், தெலுங்கில் 87 ஆயிரமும் கொண்டிருக்கும் வேளையில், தமிழ் மட்டுமே இந்த எண்ணிக்கையை அடைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

இதுவரை தமிழ்நாட்டிலிருந்து பலர் தமிழ் விக்கிப்பீடியாவில் பங்களித்து வந்தாலும், குறிப்பிடத்தக்க பங்களிப்பை உலகம் முழுவதிலிருந்தும் பலர் கொடுத்துள்ளனர். இதைத் தொடக்கக் காலத்தில் வளர்த்தெடுத்தவர் இலங்கையைச் சேர்ந்த இ.மயூரநாதன் ஆவார். அவுஸ்திரேலியாவின் கனகரத்தினம் சிறீதரன், கனடாவின் நற்கீரன், பேராசிரியர் செல்வக்குமார், மலேசியாவின் மலாக்கா முத்துக்கிருஷ்ணன், இந்தோனேசியாவின் முஹம்மது பாஹிம், நார்வேயின் கலையரசி, இலங்கையின் பீ.எம். புன்னியாமீன், அன்ரன், சஞ்சீவி சிவகுமார், சிவகோசரன் உள்ளிட்ட பலரின் பங்களிப்பு தமிழுக்கு வலுசேர்த்துள்ளது.

தமிழ் விக்கிப்பீடியா இன்றைய அளவில் மொத்தமாகச் சுமார் 4.7 கோடிச் சொற்களைக் கொண்ட கலைக்களஞ்சியமாக இருக்கிறது. சரியாக ஐந்து ஆண்டுகளுக்கு முன்னர் ஆகஸ்ட் மாதம் சுமார் 1.1 கோடி பக்கப் பார்வைகளிலிருந்து இந்த ஆண்டு ஆகஸ்ட் மாதம் சுமார் 2.3 கோடி பக்கப் பார்வைகளைப் பெற்றுள்ளது.

இதே காலக்கட்டத்தில் இந்தி விக்கிப்பீடியாவின் பக்கப் பார்வை என்பது 7.4 கோடியிலிருந்து 8.6 கோடியாக மட்டுமே உயர்ந்துள்ளது. இந்தியா, இலங்கைக்கு அடுத்ததாக அமெரிக்கா, மலேசியா, சிங்கப்பூர், கனடா, இந்தோனேசியா, ஜெர்மனி என்று தமிழ் வாசகர்கள் அதிகமாகத் தமிழ் விக்கிப்பீடியாவுக்கு வந்து படிக்கிறார்கள்.

விக்கிப்பீடியா நிறுவனம் வேங்கைத் திட்டம் உள்படப் பல்வேறு வகையில் இந்திய மொழிகளின் விக்கிப்பீடியா உள்ளடக்கத்தை அதிகரிக்க முனைந்துவருகிறது. தமிழ்நாட்டைப் பொறுத்தவரை தன்னார்வலர்களின் முயற்சியாலும் 'கணித்தமிழ்ப் பேரவை' வழியாகவும் பல கல்வி நிலையங்களில் விக்கிப்பீடியப் பயிற்சி அளிக்கப்பட்டுவருகிறது.

கடந்த காலத்தில் இந்து சமய அறநிலையத் துறை, தேசியத் தகவலியல் மையம், தமிழ் இணையக் கல்விக் கழகம், **செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்** போன்ற அரசு அமைப்புகளின் மூலம் அரசின் தரவுகள் பொதுவுரிமையில் விக்கிப்பீடியாவுக்குக் கொடையாகப் பெறப்பட்டு, பல மேம்பாடுகள் செய்யப்பட்டன.

பல அரசுத் தளங்களே தமிழில் இல்லாதபோது தன்னார்வலர்களால் வளர்க்கப்படும் தமிழ் விக்கிப்பீடியா, இணையத்தில் தமிழின் சொத்து. யாவருக்கும் உரிமையுள்ள கலைக்களஞ்சியத்தை அனைவரும் இணைந்து வளர்க்கக் கைகோக்க வேண்டும்.

– தொடர்புக்கு: neechalkaran@gmail.com

# சீனம் தமிழ் திரிசொற்கள்
## ஒரு சிறு ஒப்பீடு

**இரா. திருமாவளவன்**

தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம்
மலேசியா



சீனமொழியும் தமிழைப் போலவே தொன்மை மிக்க மொழியாகும். உலகில் செம்மொழிக்குரிய தகுதி பெற்ற நம் தாய்மொழியாம் தமிழைப் போலவே சீன மொழியும் அப்பட்டியலில் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. சீன மொழி பல்வேறு வட்டார மொழிகளாகக் கிளைவிட்டுள்ள மொழியாகும். ஆறாயிரம் ஆண்டு பழமை மிக்க இலக்கியங்கள் சீனமொழிக்கு உண்டு என்பார்கள். தொல் சீன திபெத்திய மொழிக்குடும்ப ( Proto Sino Tibetian) வரிசையில் தலைமொழியாகச் சீனம் குறிப்பிடப்படுகின்றது.

என் கழி இளமை காலத்தில் பல்லாண்டு காலமாகச் சீனர் குடியிருப்புப் பகுதியில் என் பெற்றோர் வாழ்ந்த போது சீனர்களின் மொழி, பண்பாட்டுப் பழக்க வழக்கங்களை ஓரளவு கண்டறிய கூடிய வாய்ப்பு எனக்குக் கிட்டியது. தமிழ் / திரவிட மொழிக்குடும்பப் பிரிவுகளைப் போலவே சீனரிடையே பல்வகை உட்பிரிவு கிளைமொழிகள் பேசப்படுவதை நான் உணர்ந்தேன் . கெந்தனிசு அக்கா, ஒக்கியான், வூ, மின், சியாங், கான், யூ முதாலான நூற்றுக்கும் மேற்பட்ட உட்பிரிவு மொழிகள் சீனத்திற்குள் உள்ளன. மாண்டரின் என்பது சீனர் அனைவரையும் ஒருங்கிணைக்கும் நோக்கில் பொதுவாய்ப் பேசப்படும் ஒரு பொதுமொழியாகும். கின் பேரரசை உருவாக்கிய சீன மன்னர் சீ குவாந்தி காலத்தில் தான் இம்மொழி கட்டமைக்கப்பட்டது.

சீனர்கள் தமிழரைப் போலவே உலகில் பல்வேறு நாடுகளுக்குப் புலம்பெயர்ந்து தங்கள் மொழி, இன பண்பாட்டுப் பழக்க வழக்கங்களைத் தக்க வைத்துக் கொண்டுள்ளனர். சீனருக்குள் மொழிப்பற்றும் இனப்பற்றும் இறுக்கமாக உள்ளது. எங்குச் சென்றாலும் தங்கள் மொழியை நிலைநிறுத்துவதில் உறுதியாய் இருப்பார்கள். தங்களுக்குள் பல்வகைக் கிளைமொழிகளை அவர்கள் கொண்டிருந்தாலும் சீனர் எனும் பொதுமை சார்ந்த ஒற்றுமைக்குள் அவர்கள் ஒருங்கிணைந்திருப்பார்கள். அவர்கள் மொழிவழிப் பண்பாட்டினமாய்த் தங்களை நிலைநிறுத்தியுள்ளனர் என்பது குறிப்பிடத் தக்கது.

சீனத்திற்கும் தமிழுக்கும் சொல்லொற்றுமை தொடர்பிருப்பதை அம்மொழிச் சொற்களையும் தமிழ்ச் சொற்களையும் ஒப்பீட்டாய்வு செய்கையில் தெரிய வருகின்றது.

ஒரு தொல் மூல மொழியின் தொடர்பின் வாயிலாகவோ, பண்டை நாளில் சீனர்க்கும் தமிழர்க்கும் இடையே நிகழ்ந்த பல்வகை வணிக, அரசியல் தொடர்புகளின் வாயிலாகவோ இத்தகு சொல்லொற்றுமைத் தொடர்புகள் ஏற்பட்டிருக்கலாம். அத்தகு சொற்கள் சிலவற்றை நாம் இங்குக் காணலாம்.

Buju > பூஜு > பூசு

Writing, painting

Buyi > பஞ்சு

( பஞ்சு > பஞ்ஞி > பன்யி > பூயி)

= cotton clothes

Bu > பூ > போ

Make a move,

Walk, go on foot, walk go in to an assembly hall

Bulu> walk, walk with spring steps

bù duì ~ Budui > பூடுய்= படை

Army, armed forces, a field unit

Bufen > பாகம்

= part, section, share individual part in as an intergral whole

Bu> section in part of side, upper part

>> பா > பகு > பவு > புவு > பூ எனத் திரியலாம்.

Bulei > division

Buluo > பூலு= பா> பாகம்

( குலம் மக்கள் பிரிவு)

Butou > size ( of a voluminous work)

Large book

பொத்து> பொத்தகம்> புத்தகம்

Buhua > applique , a type of handicrafts of sewing colourful pieces of clothes, to form patterns of flowers and birds

> பூக்கோலம்= பூவேலை> பூ

Buju > sew, mend ( by sewing)

பின்> பின்னு> பிஞ்து> புஞ்து> பூஜு= தைத்தல்

Nee > நீ

Ngoh >woh > நான்

நான்> ஙான்>ஙோ> வோ (woh)

Kaan > காண்= பார்

Kaan men = நீங்கள்

bulou > mend leaks or holes in objects

உல்= துளைத்தல் பொருள் வித்து.

உல்>புல்= துளைத்தல் பொருள் வேர்.

புல்= துளையுள்ள மூங்கில்

புல்லாங்குழல் .

புல்> புழை= துளை,

புல்> பொல்> பொல்லு = ஓட்டை

Buyi = benefit, help, be of great help or benefit

பயப்பு= வழங்கல்

பயத்தல்= வழங்குதல்

பயன்= நன்மை தருவது. ( benefit)

a mulin = fool, person who easily taken in

மூலி= முட்டாள்

apo = 1. husbands mother, mother in law

2. Grandma, term of respect of an elder ly woman

அம்மை> அவ்வை

அவ்வை> அவ்வா> அப்பா

( வகரம் பகரமாத் திரிதல்)

அப்பா> அப்போ= பாட்டி

ayi > aunt,,mothers sisters sister auntie, form of address of a women of ones parents generation but not related to one family

– form of address for childcare worker or house maid

– ஆயி, சின்னாயி, பெரியாயி, மகமாயி

– ( அம்மா, பாட்டி, சின்னம்மாள்)

(நான் சிறு பிள்ளையாக இருக்கும் போதிலிருந்து 26 அகவை வரை சீனர் குடியிருப்புப் பகுதியில் ~~ kampong baru sungai Terap, வாழ்ந்தேன். என் பக்கத்து வீட்டில் வாழ்ந்த மூதாட்டியை ஆயி என்றுதான் அழைப்பேன். சீனத்தில் இவ்வாறுதான் அழைக்க வேண்டும் என்றனர். தமிழ் ஆயிக்கும் சீன ஆயிக்கும் இயைந்த தொடர்புண்டு என்பதை அறிகையில் வியப்பு மேலிடுகிறது. பூரிப்பும் ஏற்படுகின்றது)

a > expressing surprise or admiration , ah, oh

ஆ ( வியப்பு)

aya > expressing surprise,

2. expressing resentment, dissatisfaction or embarrassing

ஐயா ! , ஐயோ !

Indicating surprise of pain

ஐயோ....!

ai > showing surprise or disapproval

ஐ!

aiya > அய்யா! ( வியப்பு)

aiyo > அய்யோ ( வலி, துன்பம், கவலை) aihao = ஐயவோ! , ஐயகோ! wail cry piteously

ai chou = sad and distressed அச்சோ! = கவலையால் கூறுவது.

ஒரு குறிப்பு :

aitan > aitong > aiwan > aiyan = ஐ= அச்சு=

அச்சம்

அத்து>அத்தம்= கவலை, சோகம் > அச்சத்தால் எழுவது

ai > unit of linear measure

ஆய்= நுண்மை, நுண்ணளவு.

அய்> அயிர்= மணல்

அளவு, முறை

( ai ci = take turn => மீண்டும் மீண்டும்

ஆச்சு= வினை முடிதல், நிறைவாதல்

அச்சு= சுழற்சி, அச்சாணி

aijin = get close => நெருக்கம்

ஆய்> அய்> அல்> அண்= நெருக்கம்

ai =ஆய்> ஆம் .

ai > aijie = ஆய் > ஆய்ச்சி= அப்பாவின் அம்மா= பாட்டி

ai > pure white = Snow White ( of old person hair) as white mountain snow, and clear as the moon admidst the clouds)

ஆய்= வெண்மை, வெண்மையாய் இருப்பது.

ai ai > of snow , frost, pure white ~ vast

expanse of white snow.

ஐ> வெண்மை.

ஆய்தல்> நுணுகுதல் to deminish to be

reduced

உள்ளதன் நுணுக்கம் ~ தொல். சொல். 330

அழகமைதல்> to be or be become beautiful ஆய்ந்த மோட்டின் வான்

ஐ> ஆய்= அழகு, நுண்மை

ai > short of stature ~ person of small build ~ not short of of stature

aizin > 1. low built person, short of person

2. low ~ low wall, low stool

3. low rank or grade

ஆய்> சிறுமை= smallness

ஆய் நுதன் மடந்தை ( புறம்: 249. 10.5)

ஐ> அய்> ஆய். ஐ = நுண்மை, அழகு, மென்மை, சிறுமை.

ai = old , elderly, aged, ( elderly ~ old age)

ஐ> மூத்த , பெரிய , அகவை முதிர்ந்த

ஐ> ஐயா> ஐயன்.

ai > suffer

ஐ> ஆய்= வருத்தம்

அயை> அயா> ஆய்= வருத்தம்

சாய் > Cai

சாள்> சாய்> சாய்கால் = செயற்றிறம் வாய்ந்த மதிப்பு >>>

Cai > talent, ability, ability and integrity, capable person சாய்கால் உடையவர்

Caifen

Caigan

Caihua

Caiju> same as

Caili> ability

Cai சாள்> சாய் எனும் சொல் சீனத்தில் திறம், ஆற்றல், சாயல் எனும் பொருளில் வழங்குவது குறிப்பிடத்தக்கது. இச்சொல் சீனத்தில் முன்னொட்டாகிப் பல்வேறு சொற்களைப் பிறப்பித்துள்ளது கவனிக்கத்தக்கது.

Cai > colour >> சாய் > சாயம்

இங்கு cai > சாய்> சாயம் எனத் தமிழில் வழங்குவதை நாம் அறிந்ததே.

இதே , cai > தமிழில் காயாக பச்சைத் தன்மையைக் குறிக்கும். சீனத்திலும் அதே பொருளைக் குறித்து முன்னொட்டாகப் பசுமைப் பொருளில் பல சொற்களைப் பிறப்பித்துள்ளது.

Cai > காய் = vegetables, greens காயாக இருத்தல் , பச்சையாக இருத்தல்

Cailan > காயாக, பச்சையாக இருக்கும் கீரை

Caidou > காய் , அடைக்காய் > beans

Caigua > பச்சையாய் உள்ள படரும் நிலைத்திணை, oval shaped fruit with greenish skin

உல்>குல்>கல்= கூடுதல், சேர்தல் கருத்து வேர்

கல்> கள்> கண்> கணம்= கூட்டு, குழு

கண்> காண் > can = சேர்க்கை, இணைவு

Can > join, enter, take part, participate in

Canguan > visit, observe, visiting group > கண்காணிப்பு, வருகைக் குழு

கண் > கணம் = கூட்டு

Canhe > consult > கூடிக் கலந்துரையாடல், sum up > சேர்த்தல்

Canjia > join a group or an organisation, join the trade union

Canjian >> cankan கண் >கண்காணிப்பவர் pay one respect to a superior, master

Canshu > parametre, variable in an equation கண்> கணக்கு => கணக்குச் சமன்பாடு

Canyan > ஒப்பிட்டு கணிப்பீடு செய்தல், compare and verify, ஆய்தல்

Can > கண் என்ற தமிழில் கூடல், பார்த்தல் எனும் பொருளைத் தரும் உல் எனும் வேரில் கிளைத்த அருந்தமிழ் அடி சீனத்தில் அதன் நுட்பப் பொருளில் மாறாமல் மருவி கிளைவிட்டிருப்பதை ஆராய்கையில் வெளிப்படும் உண்மையாகும்.

Di > earth, land, field >> தேய் > தேயம், தேய் > தே > di தமிழின் தேயம் எனுஞ் சொல்லின் அடியாகிய தேய் என்பதன் கடைக்குறை தே என நின்று நிலத்தைக் குறித்தது.

Diyu > தீயு = விரிந்த இடம்; large area, vast in territory, local place , தேய் > தேயம் எனும் இடத்தை வட்டாரத்தை , நாட்டைக் குறிக்கும் அருந்தமிழ்ச் சொல் தீயு diyu என மருவியுள்ளது. மொழிப்பெயர்த் தேயம் எனக் கழக இலக்கியங்களிலும் இச்சொல் இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

சீன மொழிக்கும் தமிழுக்கும் சொல்லொற்றுமைத் தொடர்பிருப்பதை மேலும் நுட்பமாய் ஆய்வு செய்து வெளிப்படுத்தலாம். இங்குப் பட்டியலிடப்பட்டுள்ள சொற்கள் நேரடியாகவும் ஒலித்திரிபைப் பெற்றும் பொருள் ஒன்றியும் தமிழோடு தொடர்பெற்றுள்ளன என்பதை அறியமுடிகின்றது. இத்தகு ஒப்பீட்டு ஆய்வைச் செய்யுதற்குச் சீன மக்களின் நேரடித் தொடர்பும் அவர்களின் சீராக ஒழுங்கமைக்கப் பெற்றிருந்த அகரமுதலிகளும் பெருந்துணையாக அமைந்தன என்றால் மிகையாகாது.

# திருக்குறளில் நீடு


முனைவர் ப. கொழுந்தசாமி,
புதுச்சேரி.




மனித மேன்மைகளை எடுத்துரைத்து, மானுட வளர்ச்சிக்கு வித்தூன்றி, மனிதவள மேம்பாட்டை ஊக்குவிக்கும் வள்ளுவம், ஒவ்வொரு சொல்லிலும் நுட்பமாக வாழ்வை வளமாக்குகின்ற விழுமியத்தை விண்டுரைக்கின்றது. ஆகவே குறட்பாக்களை மேம்போக்காகப் படிக்காமல், ஒவ்வொரு சொல்லையும் பொருண்மையியல் அணுகுமுறையில் உற்று நோக்கினால் உள்பொருள் புலப்பட்டுத் தெளிவு வசப்படும்: இழிதகைமை தீர்ந்து, கட்டறுத்து மேம்படலாம். எனவே எந்தப் பொருண்மைக் களம் / சொல் / தொடர்ப் பயன்பாடு ஆகிய மொழி மற்றும் மொழியல்லாப் புறச் சூழலில், குறிப்பிட்ட ஒரு சொல் ஆளப்பட்டுள்ளது என்பதை நோக்கிப் பொருளுணரவேண்டும். அவ் வகையில் நீடு என்னும் நீள் அடியாகத் தோன்றிய முதனிலைத் தொழிற்பெயர் வினையெச்சப் பொருளில், பயில்வதை எடுத்துரைப்பதாக இப் பகுதி இயல்கின்றது.

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார் / நிலமிசை நீடுவாழ் வார் ( குறட்பா, 03 )

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க / நெறிநின்றார் நீடுவாழ் வார் ( குறட்பா, 06 )

கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின் நெடுஞ்செல்வம் / நீடின்றி ஆங்கே கெடும் ( குறட்பா, 566 )

ஆகிய குறட்பாக்களில் நீடு என்னும் சொல் பயில்கின்றது.

*இறை நினைவு கேடில்லாத நீடித்த நல்வாழ்வை நல்கும் : பொறிகளை நன்னெறிப்படுத்தினால் கேடின்றி இன்பமாக வாழலாம் என்று உடன்பாட்டிலும், கடுஞ்சொல் கூறுவானும், கருணையில்லாதவனும் வளமிழந்து வாடுவான் என்று அறநெறியற்றவரின் கேட்டையும் திருக்குறள் எடுத்துரைக்கின்றது.

மேற்படி வழக்குகளை நோக்குகையில் , வள்ளுவம் உடன்பாட்டு / எதிர்மறை அமைப்பில், அறஞ் செய்தால் நிலைபேறு கிட்டும்; அறத்தை மறந்தால் கேடுறும் என்று எச்சரிப்பதை அறியலாம். ஆகவே புலனடக்கி, உயர்வான/ ஆக்கப்பூர்வமான எண்ணங்களோடு மேன்மையான வாழ்க்கையை வசப்படுத்திக் கேடின்றி வாழ வழிகாட்டுவதாக வான்மறை வள்ளுவம் இயல்வதைத் தெளிந்தால் , மானுட வெற்றி வாய்ப்பாகும். இதை உணர்த்த நீடு என்னும் சொல் பயன்கொள்ளப்பட்டுள்ளது.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 141–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் தமிழ்க் கலைக்கழகத்தின்141 ஆவது கூட்டம் 21.09.2023 ஆம் நாள் அகரமுதலி இயக்ககத்தில், இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் தலைமையில் நடைபெற்றது. இந்தக் கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், திரு. நா.சு.சிதம்பரம், திரு.அ.மதிவாணன், மேனாள் பதிப்பாசிரியர்கள் முனைவர் மா. பூங்குன்றன், முனைவர் இரா.கு. ஆல்துரை ஆகியோர் பங்கேற்றனர். நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 225 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

ஏற்பளித்த கலைச்சொற்களுள் சில :

Aspergers disorder – மனவளர்ச்சிக் குறைபாடு
Apterygota – சிறகற்றவை
Autocinesis – தானியங்கியல்
Automacy – தன்னியக்கம்
Autopologist – தானியங்கியர்
social Awakening – குமுக விழிப்புணர்வு
Coercing – கட்டாயப்படுத்தல்
Degage – தளையற்ற
High pressure boiler – உயர் அழுத்தக் கொதிகலன்
Indenture dated – ஒப்பந்த நாள்
Pseudoberry – போலிச்சதைக்கனி
Synovial lining – மூட்டு அகவுறை
Synthetic data – தொகுப்புத்தரவு
Xeroadiography – ஊடுகதிர்ப் படமுறை

# தமிழ்க் கலைக்கழகத்தின் 142–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் தமிழ்க் கலைக்கழகத்தின்142ஆவது கூட்டம் 27.09.2023 ஆம் நாள் அகரமுதலி இயக்ககத்தில், இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் தலைமையில் நடைபெற்றது. இந்தக் கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், மேனாள் பதிப்பாசிரியர்கள் முனைவர் மா. பூங்குன்றன், முனைவர் இரா.கு. ஆல்துரை ஆகியோர் பங்கேற்றனர். அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 230 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

ஏற்பளித்த கலைச்சொற்களுள் சில :

agrivoltaics –கழனிக் கதிர் மின்னாற்றல்

Anacoenosis – கருத்துணர் சொல்லணி

auscultatory –உறுப்பொலி ஆய்வு

Cats Whisker–மன ஈர்ப்பு

disco nanny –இரவுநேரக் குழந்தை பேணுநர்

eco activist –சூழலியல் ஆர்வலர்

effective altruism –ஒப்புரவு ஒழுகல்

fair weather friend –உற்றுழி உதவா நண்பன்

Metro Bus Feeder –பெருநகர இணைப்புப் பேருந்து

feeder cattle –கால்நடைக் கொழுவுணவு

Grinding bond–சாணைக்கல் தொகுபொருள்

# சென்னை, குருநானக் கல்லூரி மாணவ – மாணவிகளுக்கான அகப்பயிற்சித் திட்டம்




செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ் (Internship programme), சென்னை, குருநானக் கல்லூரியின் இளங்கலை இயற்பியல், இளங்கலைப் பொருளியல், இளங்கலை வணிகவியல், இளநிலை உயிர்த் தொழில்நுட்பவியல், இளநிலை விலங்கியல், இளநிலைத் தாவர உயிரியல் (ம) தாவர உயிரித் தொழில்நுட்பவியல் மாணவ – மாணவிகளுக்கான அகப்பயிற்சியின் நிறைவு நிகழ்வில் அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் மாணவ – மாணவியருக்கு அரசு சான்றிதழ்களை வழங்கிச் சிறப்பித்தார். குருநானக் கல்லூரி மாணவர்களுக்கு 19.09.2023 முதல் 23.09.2023 வரை அகப்பயிற்சியளிக்கப்பட்டது.

23.09.2023 ஆம் நாள் நடைபெற்ற நிறைவு நிகழ்வில் பேசிய அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள், மக்களுக்கும் மாக்களுக்குமான வேறுபாட்டினை உணர்த்துவது மொழி. மொழி என்பது வெறும் கருத்துப் பரிமாற்ற ஊடகம் அல்ல; உறவுகளை இணைக்கும் உணர்வுப் பாலம். எனவே மொழியின் தன்மை அறிந்து, தாய்மொழியாம் தமிழைப் பேசும்போது பிறமொழிகள் கலக்காமல் பேசவேண்டும். கேளுங்கள் – படியுங்கள் – சிந்தியுங்கள் – செயற்படுங்கள் என்பர் அறிஞர்பெருமக்கள். சிந்தித்துச் செயலாற்றுவதற்குப் பகுத்தறிவு துணைநிற்கும். மொழியின் தன்மையையும் பகுத்தறிந்து கலப்பின்றி அதனைப் பயன்கொள்ள வேண்டும். பிறமொழிகளை வாசிக்கலாம், ஆனால் தாய்தமிழை உயிராக நேசிக்க வேண்டும். தமிழைக் கைக்கொண்டு வாழ்வில் மேன்மை அடைய வேண்டும். அடுத்த தலைமுறை குழந்தைகளுக்காவது அழகிய தமிழ்ப் பெயர்களைச் சூட்டச் செய்ய வேண்டும். தமிழிலேயே தலைப்பெழுத்திட்டுக் கையொப்பமிடுவதை இளைய தலைமுறை மாணவர்கள் கடமையாகக் கொண்டு கடைப்பிடிக்க வேண்டும். வழிபாடுகளில் தமிழையும் உணவு – உடைகளில் தமிழ் மரபையும் கடைப்பிடிக்க வேண்டும்.

மாணவர்கள் நன்கு படித்து உயர்பதவிகளுக்கு வந்து வாழ்வில் மேன்மையுற வேண்டும். தங்கு – திட்டமிடு – செற்படு என்ற முறையில் செயலாற்றித் தங்களின் பதவிகளால் சமூகத்திற்குப் பயன்தரும் திட்டங்களை நிறைவேற்ற வேண்டும். அதில் தாய்த்தமிழின் மேம்பாடும் தவறாது இருக்க வேண்டும். வேளாண் நிலங்களில் உழுவுத்தொழில் செய்வதற்கு வழியில்லாமல் வாடும் ஏழை உழுகுடி மக்களைச் சந்தித்து உழவுக்கும் அவர்களின் உயர்வுக்கும் தேவையான உதவிகளைச் செய்வதையே இளைய தலைமுறை மாணவர்கள் வாழ்வின் இலக்காகக் கொள்ள வேண்டும் என்று வாழ்த்தி, மாணவ – மாணவியருக்கு அரசு சான்றிதழ்களை வழங்கிச் சிறப்பித்தார்.

நிகழ்வில், அகரமுதலித் திட்ட இயக்கக அலுவலர்கள், பணியாளர்கள் திட்ட ஒருங்கிணைப்பாளர் திருமதி கு. சங்கீதா உள்ளிட்டோர் கலந்துகொண்டனர்.

# கிண்டி, செல்லம்மாள் மகளிர் கல்லூரித் தமிழ்த்துறை மாணவிகளுக்கு அகப்பயிற்சித் திட்டம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ் (Internship programme), கிண்டி, செல்லம்மாள் மகளிர் கல்லூரித் தமிழ்த்துறை மாணவிகளுக்கான அகப்பயிற்சி 25.09.2023 முதல் 09.10.2023 நடைபெற்றது. அகப்பயிற்சியின் நிறைவு நாள் 09.10.2023 ஆம் நாள் இயக்ககத்தில் நடைபெற்ற நிகழ்வில் அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் மாணவியருக்கு அரசு சான்றிதழ்களை வழங்கிச் சிறப்பித்தார்.

நிறைவு விழாவில் பேசிய அகரமுதலி இயக்குநர், தமிழ்மொழியைத் தாய்மொழியாகப் பெற்றதற்குத் தமிழர்கள் அனைவரும் நாம் பெருமை கொள்வோம். அவ்வாறு பெருமை கொள்ளும் நாம் எல்லாம் தெரிந்து கொள்ள வேண்டும். கணினி மற்றும் கைப்பேசியில் முழுவதுமாகத் தமிழ் பயன்படுத்த வேண்டும் என்ற வேண்டுகோளை மாணவியர் இடத்தில் முன்வைத்தார். படிக்காத பாமரர்கள் கூட நம் தாய்மொழியாம் தமிழ்மொழியைப் பொதுத் தளங்களில் பயன்படுத்துகிறார்கள். மெத்தப் படித்தவர்கள் தான் பிறமொழி கலந்து தமிழ்மொழி பேசுவதை நாகரிகமாக எண்ணுகிறார்கள். இது மொழி வளர்ச்சிக்கு உகந்தது அல்ல. இதையெல்லாம் மாணவர்கள் நீங்கள் நீக்கவேண்டும். இந்நிலை மாற்றவே நீங்கள் பெற்ற பயிற்சி இதற்குப் பயன்படும். எனவே தமிழ் படித்த அனைவரும் இனிமேல் அனைத்து நிலைகளிலும் தமிழ் மட்டுமே பயன்படுத்த உறுதி ஏற்கவேண்டும் என்று கூறினார்.

அதுமட்டும் இல்லாமல் கோவிலுக்குச் சென்றால் தமிழில் வழிபாடு செய்யுங்கள் என்று கேட்டுக்கொண்டார். தமிழ்த்துறை மாணவர்கள் வெறும் பாடங்களை மட்டும் பயில்பவர்கள் அல்லர், வாழ்வியல் அறங்களையும், மக்களின் மனங்களையும் படிப்பவர்கள். தமிழ்த்துறை மாணவர்கள் பன்மொழி அறிவோடு கலைச்சொல்லாக்கத் திறனையும் வளர்த்துக்கொள்ள வேண்டும். பிறமொழிக் கலப்பின்றிப் பேசுதல், அழகிய தமிழ்ப் பெயர் சூட்டுதல், தமிழிலேயே கையொப்பமிடுதல் ஆகியவற்றைத் தம் கடமையாகக் கொண்டு கடைப்பிடிக்க வேண்டும். மொத்தத்தில் தமிழை இளைய தலைமுறை மாணவர்கள் தம் வாழ்வியலாகக் கொண்டு செயலாற்றி வெற்றிபெற வேண்டும் என்று வாழ்த்தி, மாணவியருக்கு அரசு சான்றிதழ்களை வழங்கிச் சிறப்பித்தார்.

நிகழ்வில், அகப்பயிற்சி ஒருங்கிணைப்பாளர்கள் தொகுப்பாளர் வே.பிரபு மற்றும் கி.இராமர், அகரமுதலித் திட்ட இயக்கக பதிப்பாசிரியர்கள், தொகுப்பாளர்கள், கண்காணிப்பாளர் மற்றும் அலுவலர்கள், பணியாளர்கள் உள்ளிட்டோர் கலந்துகொண்டனர்.

# அகரமுதலி இயக்ககத்தில் சட்டத்துறை வல்லுநர் குழுக்கூட்டம்!

## 15 வல்லுநர்கள் பங்கேற்று 1362 கலைச்சொற்கள் வழங்கினார்கள் !









செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் சார்பில், துறைவாரியாக வல்லுநர் குழுக்கூட்டங்கள் நடத்தி, அந்தந்தத் துறைசார்ந்த கலைச்சொற்கள் தொகுக்கப்பட்டு சொற்குவையில் பதிவேற்றம் செய்வதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுவருகின்றன.

அந்தவகையில் இவ்வியக்ககத்தின் கூட்டரங்கத்தில், 29.09.2023 வெள்ளிக்கிழமையன்று சட்டத்துறை வல்லுநர் குழுக்கூட்டம் காலை 10.00 மணியளவில் தொடங்கி நடைபெற்றது.





அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில், பதிப்பாசிரியர் முனைவர் மா. பூங்குன்றன் அவர்கள் நோக்கவுரையாற்றினார்.





கூட்டத்தில், சென்னை மாவட்ட மேனாள் நீதிபதி திரு. கு. தர்மராஜ், மாநில சட்ட ஆட்சிமொழி ஆணைய மேனாள் உறுப்பினர் திரு. மு. முத்துவேல், வழக்கறிஞர்கள் திருமதி இ. அங்கயற்கண்ணி, திரு. இரா. கணேசன், திரு. த. சிவக்குமார், திரு. செந்தமிழ்ச் செல்வன், திரு. பா.மு. திருமலை தமிழரசன், திரு. கு. பகவத்சிங், திரு. அ. மதிவாணன், திரு. மா. மதிவாணன், திரு. பா. மீனாட்சி சுந்தரம், திரு. ம.முருகேசன், பட்டயக் கணக்காளர் திரு. க. இராசவேல் ஆகியோர் பங்கேற்றுத் தங்கள் துறைசார்ந்த 1362 தமிழ்க் கலைச்சொற்களை வழங்கினார்கள்.





கூட்டத்தில் தலைமையுரையாற்றிய அகரமுதலி இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள், "தமிழ்நாடு அரசின் சட்டமன்றப் பேரவை அறிவிப்பின்படி ஆண்டுதோறும் அனைத்துத் துறை சார்ந்த பிறமொழிக் கலைச்சொற்களுக்கு இணையான தமிழ்க் கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து மக்களின் பயன்பாட்டுக்குக் கலைச்சொல் குறுநூலாக வழங்க வேண்டும் என்ற அடிப்படையில் வல்லுநர் குழுக் கூட்டங்கள் அகரமுதலி இயக்ககத்தால் நடத்தப்பெற்று, துறைசார் கலைச்சொல் குறுநூல்கள் அரசின் அனைத்துத் துறைத்தலைமை அலுவலகங்களுக்கும் வழங்கப்பட்டுவருகின்றன. அந்தவகையில் குமுகத்தின் எல்லாத் துறைகளையும் நெறிப்படுத்துகின்ற நிலையில் இருக்கின்ற தகுதிசான்ற சட்டத்துறையில் உள்ள அனைத்துச் சொற்களுக்குமான தமிழ்க் கலைச்சொற்களை துறைசார் வல்லுநர்களுடன் கலந்து வடிவமைக்கும் வகையில் இக்கூட்டம் நடைபெறுகிறது. வழக்கறிஞராகவும் சிறந்த படைப்பாளியாகவும் விளங்கிய பம்மல் சம்பந்தனார் 70–க்கும் மேற்பட்ட ஆங்கில நூல்களைத் தமிழாக்கம் செய்து வழங்கியதோடு, தமிழ்மண் சார்ந்த பண்பாட்டோடு எண்ணற்ற சொல்லாக்கத்தை நமக்குத் தந்தார். கப்பலோட்டிய தமிழன் என்று போற்றப்படுகிற வ.உ.சி. அவர்களும் வழக்கறிஞராக இருந்து









ஆற்றிய தமிழ்த்தொண்டை மறக்க இயலாது. அத்தகைய சான்றோர்களின் வழியில் நாமும் தமிழ்ப்பற்றுடன் செயலாற்றி, சட்டக் கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்துப் புழக்கத்திற்குக் கொண்டுவரவேண்டும். உரிமையியல் (ம) குற்றவியல் வழக்காடு மன்றங்கள் சார்ந்த சொற்கள் தமிழில் இல்லை என்ற நிலையை மாற்ற வேண்டும். அதற்கு உங்களைப் போன்ற சட்ட வல்லுநர்களின் துணையும் ஒத்துழைப்பும் தேவை" என்று கூறினார்.



கூட்டத்தில் பேசிய வல்லுநர்கள், "தமிழ்மொழி சொல்வளம் நிறைந்த மொழி என்பதால் ஒரு ஆங்கிலச் சொல்லுக்கு நிறைய தமிழ்ச் சொல்லாக்கங்கள் உள்ளன. ஆனால், சட்டத்துறைக் கலைச்சொற்கள் என்ற நிலை வரும்போது, பொருள் மயக்கம் தராத வகையில் ஒரு சொல்லுக்கு ஏற்பான ஒரு கலைச்சொல்லாக்கம் என்ற நிலையில், தரப்படுத்தி நிலைப்படுத்த வேண்டும்.





எல்லாச் சொற்களையும் மக்கள்மயப்படுத்த இயலாது என்பதால் சட்டக் கலைச்சொற்களில் மக்களுக்கானது, துறை வல்லுநர்களுக்கானது என்று வகைப்படுத்தித் தொகுத்து, பயன்பாட்டுக்கு வழங்கவேண்டும், என்பன உள்ளிட்ட கருத்துகளை முன்வைத்தார்கள்.

திட்ட ஒருங்கிணைப்பாளர் திருமதி ஜெ. சாந்தி அவர்கள் வரவேற்புரை வழங்க, கூட்ட நிகழ்வுகளை இயக்ககத் தொகுப்பாளர் முனைவர் வே. கார்த்திக், நெறியாளுகை செய்தார். நிறைவாக, பதிப்பாசிரியர் முனைவர் தி. பாலசுப்பிரமணியன் அவர்கள் நன்றியுரை கூறினார்.

## வல்லுநர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில :

| | |
|---|---|
| Abrogation | சட்ட நீக்கம், விட்டொழிப்பு |
| Absolute conveyance liability | முழுபொறுப்பு, முழுப்பொறுப்படைவு, கடும் பொறுப்படைவு |
| Adapted law | தழுவிய சட்டம் |
| Advance hearing petition | வழக்கு முன் வைப்பு மனு |
| Adlitem | வழக்கிற்கென |
| Assumption | தற்கோள், எடுகோள் |
| Approbate and reprobate | ஏற்கவும் மறுக்கவும் |
| Assassination | மீக்கடுங்கொலை |
| Adolescent | வளரிளந்தையர், குமரவர் |
| Authority | தகவர் |
| Advisory jurisdiction | அறிவுரை ஆள்வரை |
| Conclusive | அறுதியான சான்றுறுதி, இறுதியான சான்றுறுதி |
| command | செல்லாண்மை, உத்தரவு |
| Cognizable offence | பிடியாணை வேண்டா குற்றம் |
| Criminal intention | குற்ற எண்ணம், குற்ற நோக்கம், குற்றமுறு உட்கருத்து |
| Judicial separation | தீர்புவழிப் பிரிவுறைவு |
| Jury | சான்றாயம் |
| Just and fair | நேரியதும் நேர்மையானதும், நேரியதும் நடுநிலைமையானதும் |
| Just and equitable claim | நேரியதும் தகுமுறையானதும் |
| Fiction of law | சட்டங்கொள் புனைவு, தொழில் கூட்டமைப்பு, நிறுமம், கூட்டு வாணிக நிலையம், நிறுவனம், அசையாத, மாறாத |
| Fiscal laws | வருநிதிச் சட்டங்கள் |
| Fiction of law | சட்டங்கொள் புனைவு |
| Felon | பெருங்குற்றவாளியர் |
| Fore goer | முற்பதவியாளர் |

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் (ம) தஞ்சை, தமிழ்ப் பல்கலைக்கழக அகராதியியல்துறை இணைந்து நடத்திய சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் – 2023











தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர
முதலித் திட்ட இயக்ககம் தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக அகராதியியல்
துறையோடு இணைந்து நான்கு நாள் சொற்குவை மாணவத் தூதுவர்
பயிற்சித் திட்டத்தை நடத்தியது. இதில் 16 கல்லூரிகளில் இருந்து 200
மாணவர்கள் பங்கேற்றனர். இந்தப் பயிற்சியில் மொழிபெயர்ப்பு, கலைச்
சொல்லாக்கம், கணினித்தமிழ், அகராதியியல் மொழிப் பயிற்சி, தனித்தமிழ்ப்
படைப்புகள் ஆகியன குறித்து மாணவர்களுக்குத் திறன்மிக்க சான்றோர்கள் பயிற்சி அளித்தனர்.





மொழிபெயர்ப்புக் குறித்து, தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக மொழிபெயர்ப்புத் துறைத் தலைவர்
முனைவர் இராசு முருகன், கணினித் தமிழ் எனும் தலைப்பில் திருச்சிராப்பள்ளி கணினித் தமிழ்ப்
பேராசிரியர் முனைவர் துரை மணிகண்டன், அகராதியியல் குறித்துப்
பேராசிரியர் முனைவர் செ.த.ஜாக்குலின், கலைச் சொல்லாக்கம் குறித்துத்
தமிழ்ப் பல்கலைக்கழகப் பேராசிரியர் முனைவர் இரா. இந்து, தனித்தமிழ்
இயக்கம் மற்றும் தனித் தமிழில் இலக்கியம் படைத்தல் ஆகியன குறித்துத்
தமிழ்ப் பல்கலைக்கழக அயல்நாட்டுத் தமிழர் புலத்தின் தலைவர் பேராசிரியர்
முனைவர் இரா.குறிஞ்சிவேந்தன், தமிழ் மொழியைப் பிழையற பேசுதல் எழுதுதல் குறித்த மொழிப்
பயிற்சியினைத் தொல்காப்பிய மன்றத்தின் தலைவர் தமிழறிஞர் புலவர் வெற்றியழகன் ஆகியோர்
பயிற்சி அளித்தனர்.





கடந்த 03.10.202. – 06.10.2023 வரையில் கலந்து கொண்ட 200
மாணவர்களும் பயிற்சிகளின் மூலம் கலைச்சொல்லாக்கம் செய்வதற்கும்,
அகராதிகளை அணியம் செய்வதற்கும், சிறந்ததொரு அறிவினைப்

பெற்றார்கள். பங்கேற்ற மாணவர்களுக்குச் சொற்குவை மாணவத் தூதுவர் சான்றிதழ் வழங்கப்பட்டது. இந்த நான்கு நாள்களில் பல்வேறு அகராதிகளிலிருந்து சொற்களைத் தேர்வு செய்து ஒவ்வொருவரும் 100 சொற்களைச் சொற்குவைத் திட்டத்திற்கு வழங்கினார்கள். இப்பயிற்சித் திட்டத்தின் மூலம் மாணவர்களால் வழங்கப்பட்ட புதிய மற்றும் பழைய சொற்கள் ஆயிரத்திற்கும் மேற்பட்டவை ஆகும்.





இந்த நிகழ்ச்சியைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தர் முனைவர் வி.திருவள்ளுவன் அவர்கள் தொடங்கி வைத்தார். செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் திட்டத்தின் நோக்கம் குறித்து உரையாற்றினார். திட்டத்தின்ஒருங்கிணைப்பினை இயக்கத்தின் தொகுப்பாளர்கள் திருமதி கு.சங்கீதா, திரு. வே.பிரபு மற்றும் பதிப்பாசிரியர் திரு. கி.தமிழ்மணி ஆகியோர் செய்திருந்தனர்.





பயிற்சியின் நிறைவு விழா, கடந்த 06.10.2023 ஆம் நாள் , தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தர் முனைவர் வி.திருவள்ளுவன்தலைமையில் நடந்தது. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் முன்னிலை வகித்தார். பயிற்சி பெற்ற மாணவர்களுக்குச் சொற்குவை மாணவத் தூதுவர் சான்றிதழைத் தஞ்சாவூர் மருத்துவர் கலைமாமணி சு.நரேந்திரன் அவர்கள் வழங்கினார்.





அவர் பேசுகையில், "வருங்கால மொழியின் வளர்ச்சிக்குச் சொல் இன்றியமையாத் தேவையாகிறது. சொற்களின் வளமே மொழியின் வளம் என்பதை இளைய தலைமுறையினர் உணர வேண்டும். ஒவ்வொரு நாளும் அறிவியல் விந்தையால் புதுப்புதுப் பிறமொழிச் சொற்கள் புழங்கி வரக்கூடிய இக்காலத்தில் அத்தனைச் சொற்களுக்கும் நாம் உடனுக்குடன் தமிழில் கலைச் சொற்களைப் படைக்க வேண்டும். இதைச் செய்வதற்குத் துடிப்பு மிக்க மாணவர்களாகிய உங்களால் மட்டுமே முடியும். அதற்கு இந்தச் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம் உறுதுணையாக அமையும் என்பதில் எந்தவிதமான ஐயமில்லை.

சொற்குவை வலைதளத்தை நீங்கள் முழுமையாகப் பயன்படுத்த வேண்டும். இந்த வலைத் தளத்தில் இரண்டு ஆண்டுகளுக்கு முன்பாக மூன்று இலட்சமாக இருந்த சொற்களின் எண்ணிக்கை கடந்த இரண்டரை ஆண்டுகளில் தமிழக அரசு எடுத்த சீரிய நடவடிக்கையால் 13 இலட்சத்து 20 ஆயிரம் சொற்களாக உயர்ந்துள்ளது. வருகை தந்துள்ள மாணவர்கள் தமிழை மட்டுமே படித்தவர்கள் அல்ல.



இங்கு இருக்கும்மாணவர்கள் நான் அறிந்த வரையில் வணிகவியல் படித்தவர்கள், வரலாறு படிப்பவர்கள், தாவரவியல் படிப்பவர்கள், விலங்கியல் படிப்பவர்கள் என்பதை நான் கேட்டு அறிந்தேன். உங்கள்துறை சார்ந்த சொற்களை ஆங்கிலத்தில் நீங்கள் பயன்படுத்தும் போது அதற்கு இணையான தமிழ்ச் சொற்கள் பாடத்திட்டப் புத்தகத்தில் இல்லை என்று சொன்னாலும், சொற்குவை வலைதளத்துக்குச் சென்று நீங்கள் சொல்லைப் பதிவு செய்தால் அதற்கு இணையான தமிழ்ச்சொல் அதிலே வருவதைப் பார்த்து நீங்கள் மகிழலாம் என்றார். இந்த நிகழ்வில் தஞ்சை, கலைபண்பாட்டுத்துறை மேனாள் இணை இயக்குநர் திரு. இரா.குணசேகரன் மகிழ்வுரை ஆற்றினார். நிகழ்ச்சியின் நிறைவில் தமிழ்ப் பல்கலைக்கழக அகராதித்துறை இணைப் பேராசிரியர் திரு. சி.வீரமணி நன்றியுரை கூறினார். இந்த நிகழ்ச்சியில் அகராதித் துறை முன்னாள் துறைத் தலைவர் முனைவர் உல. பாலசுப்பிரமணியன் உடனிருந்தார். இந்தப் பயிலரங்கில் தஞ்சை மாவட்டத்தில் உள்ள கல்லூரி மாணவர்கள் ஏராளமானோர் கலந்து கொண்டனர்.

# செய்தி நறுக்குகள்

★ புதன்கிழமை, 27 செப்டம்பர் 2023

## சொற்குவை தளத்தில் 13 லட்சம் சொற்கள்

**சென்னை, செப். 26:** சொற்குவை தளத்தில் 13 லட்சம் சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளதாக தமிழக அரசின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் தெரிவித்துள்ளது.

தமிழக அரசின் செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் அகராதி உருவாக்கம், கலைச்சொல் உருவாக்கம், வட்டார வழக்கு சொற்கள் தொகுப்பு உள்ளிட்ட பல்வேறு பணிகளை மேற்கொண்டு வருகிறது.

அதன்படி, தற்காலத்தில் உருவாகும் புதிய துறைகளில் வழங்கப்படும், புதிய கலைச் சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்கள் உருவாக்கப்படுகின்றன. அவை, வல்லுநர்களின் ஒப்புதலுக்குப் பின் 'சொற்குவை டாட் காம்' எனும் இணையதளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

கடந்த ஏப்ரல் மாதம் இந்தத் தளத்தில் சொற்களின் எண்ணிக்கை 10 லட்சம் என்ற இலக்கை எட்டியிருந்த நிலையில், அடுத்த ஐந்து மாதங்களில் பதிவேற்றம் செய்யப்படும் சொற்களில் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே வந்தது.

இந்த நிலையில், செவ்வாய்க்கிழமை நிலவரப்படி சொற்குவை தளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்ட சொற்களின் எண்ணிக்கை 13 லட்சத்தைக் கடந்துள்ளது. தற்போது இதில் 13 லட்சத்து 8,796 சொற்கள் உள்ளன. குறிப்பாக, கடந்த இரு ஆண்டுகளில் மட்டும் 9 லட்சத்து 17 ஆயிரத்து 114 சொற்கள் சொற்குவையில் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. நிகழாண்டு இறுதிக்குள் இந்த எண்ணிக்கையைக் குறைந்தது 15 லட்சமாக உயர்த்தும் வகையில் சொல் திரட்டுப் பணிகள் முடுக்கிவிடப்பட்டுள்ளன.

தமிழக அரசின் சீரிய நெறிப்படுத்தலாலும், அகரமுதலி இயக்ககத்தின் செயற்பாட்டாலும் 2.25 லட்சம் பேர் சொற்குவை வலைதளத்தின் உலகளாவிய பயனாளராக உள்ளனர் என அகர முதலித் திட்ட இயக்குநர் கோ.விசயராகவன் வெளியிட்ட செய்திக்குறிப்பில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

---

இந்தியாவில் அதிக படங்களுடன் வெளிவரும் ஒரே மாலை நாளிதழ்
மாலை தமிழகம்
India's No1 English Evening Daily
EVENING TAMIL NADU
www.maalaitamizhagam.com
Volume : 14 Issue : 192 Pages 8 Price ₹ 3
30-9-2023



## தமிழ்மொழியில் வலிந்து திணிக்கப்பட்ட இலக்கண கூறுகள் கிடையாது: வெற்றியழகனார்



**கல்பாக்கம், செப். 29-** தமிழ்நாடு அரசு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ், சென்னை கிண்டி, செல்லம்மாள் மகளிர் கல்லூரித் தமிழ்த்துறை மாணவிகளுக்கான அகப்பயிற்சி நடைபெற்றது. இயக்குனர் கோ.விசயராகவன் தலைமை தாங்கினார். நிகழ்ச்சியில் 19 மாணவியர் பங்கேற்றனர். அடிப்படைத் தமிழ் இலக்கணம் குறித்தும், சொற்குவை வலைத்தளத்தின் பயன்பாடு, கலைச்சொல்லாக்கத்தின் தேவை, மொழிக்காப்பில் அகராதிகளின் பங்கு, பிறமொழிக் கலப்பின்றித் தமிழ் பேசுதல் உள்ளிட்டவை குறித்து மாணவர்களுக்கு பயிற்சியளிக்கப்பட்டது. நிகழ்ச்சியில் தொல்காப்பியர் தமிழ்ச் சங்கத் தலைவர் புலவர் வெற்றியழகனார் கலந்துகொண்டு அடிப்படைத் தமிழ் இலக்கணம் குறித்துப் பயிற்சியளித்தார்.

அப்போது, ''தமிழ் ஓர் இயற்கை மொழி. அதில் வலிந்து திணிக்கப்பட்ட இலக்கணக் கூறுகள் கிடையாது.

தமிழில் காரணப் பொருள் இன்றி எந்த ஒரு சொல்லும் இல்லை. அதைத்தான் தொல்காப்பியர் 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்று குறிப்பிட்டுள்ளார். தமிழ் நம் தாய்மொழி என்பதால் அடிப்படைத் தமிழ் இலக்கணக் கூறுகள் நம் மூளையில் இயற்கையாகவே பதிந்திருக்கின்றன. அவற்றை முறையாக உணர்ந்து கொண்டால் தமிழ் இலக்கணம் எளிமையாகக் கை வரப் பெறும்,'' என்றார்.

---

சென்னை
மதுரை
கோவை
திருச்சி
திருநெல்வேலி
வேலூர்
தருமபுரி
புது தில்லி
விழுப்புரம்
நாகப்பட்டினம்
http://www.dinamani.com
தினமணி
★★
வெள்ளிக்கிழமை
6 அக்டோபர் 2023
திருச்சி
12 பக்கங்கள் ரூ.9

## கலைச்சொற்கள் மீளாக்கத்துக்காகவே 'சொற்குவை மாணவத் தூதுவர் திட்டம்'



தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் நடைபெறும் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சி திட்டத்தில் வியாழக்கிழமை பங்கேற்ற மாணவர்கள்.

**தஞ்சாவூர், அக். 5:** தமிழில் கலைச்சொற்கள் மீளாக்கத்துக்காகவே சொற்குவை மாணவத் தூதுவர் திட்டம் தொடங்கப்பட்டுள்ளது என்றார் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் கோ. விசயராகவன்.

தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் தமிழ் வளர்ச்சித் துறையின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம், தமிழ்ப் பல்கலைக்கழக அகராதியியல் துறை சார்பில் கடந்த அக்டோபர் 3 ஆம் தேதி தொடங்கிய சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சி திட்டம் வெள்ளிக்கிழமை (அக்.6) நிறைவடைகிறது.

இதனிடையே இத்திட்டம் குறித்து செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் கோ. விசயராகவன் வியாழக்கிழமை தெரிவித்தது:

இந்தப் பயிற்சித் திட்டத்தில் 5 கல்லூரிகளில் இருந்து ஒரு நாளுக்கு 10 பேர் வீதம் வரும் மொத்தம் 50 பேருக்கு 6 அறிஞர்கள் பயிற்சி அளிக்கின்றனர்.

பயிற்சியில் கலைச் சொல்லாக்கம் என்பது என்ன?, மொழிபெயர்ப்புக்கும், கலைச் சொல்லாக்கத்துக்கும் உள்ள வேறுபாடு, பொறியியல், கணினி உள்ளிட்டவற்றில் வரும் புதிய சொற்கள், அவற்றை தமிழாக்கம் செய்வது குறித்து விளக்கப்படுகிறது. ஆங்கிலம் உள்ளிட்ட பிற மொழிகளில் காரண, காரியமில்லாமல் கலைச் சொல்லாக்கம் நடைபெறுகிறது. ஆனால் தமிழில் மட்டுமே காரண, காரியத்துடன் கலைச் சொல் அமைகிறது. அந்த அளவுக்குத் தமிழ் சொற்கள் கொட்டிக் [illegible] காரணமான [illegible] திருவாசகம், நாலாயிர திவ்யபிரபந்தம், திருக்குறள், சங்க இலக்கியங்கள் உள்பட எல்லா நூல்களிலும் கலைச்சொற்கள் பொதிந்துள்ளன.

இத்தகைய சொற்களைத்தான் மாணவர்கள் மத்தியில் கொண்டு வந்து மீளாக்கம் செய்ய இப்பயிற்சி நடத்தப்படுகிறது. இதில் முதுகலை தமிழ்ப் படிப்பவர்களுக்கு மட்டுமல்லாமல், முதுநிலை அறிவியல் படிக்கும் மாணவர்களுக்கும் பயிற்சி அளிக்கப்படுகிறது. தங்களுடைய துறை சார்ந்த அனைத்து கலைச் சொற்களும் தமிழில் இருப்பதை உணர்ந்து, சொற்களை உருவாக்கவே இப்பயிற்சி வழங்கப்படுகிறது. இங்கு பயிற்சி பெறுவோர் தங்களது கல்லூரிக்குச் சென்று மற்ற மாணவர்களுக்கும் தாங்கள் அறிந்ததைக் கொண்டு சேர்க்கும் விதமாக இந்தச் சொற்குவை மாணவத் தூதுவர் திட்டம் செயல்படுத்தப்படுகிறது.

இப்பயிற்சி முகாமில் தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள 16 கல்லூரிகளைச் சேர்ந்த 200 பேருக்கு பயிற்சி அளிக்கப்படுகிறது. தொடர்ந்து ஒவ்வொரு மாவட்டத்திலும் இப்பயிற்சி முகாம் நடத்தப்படவுள்ளது.

சொற்குவை வலைதளத்தில் இரு ஆண்டுகளுக்கு முன் 3 லட்சம் கலைச்சொற்கள் இருந்த நிலையில், தமிழ்நாடு அரசின் சீரிய நடவடிக்கையால் தற்போது 13.13 லட்சம் கலைச்சொற்களாக அதிகரித்துள்ளது. இதேபோல, சொற்குவை வலைதளத்தைப் பயன்படுத்தும் பயனர்களின் எண்ணிக்கை இரு ஆண்டுகளுக்கு முன்பு வரை 20 ஆயிரமாக இருந்தது. தற்போது 2.30 லட்சமாக அதிகரித்துள்ளது. இந்நிலையில் இப்பயிற்சித் திட்டத்தின் மூலம் கலைச்சொற்களின் எண்ணிக்கை மேலும் அதிகரிக்கும் என்றார் விசயராகவன்.

# செய்தி நறுக்குகள்



தினமணி

## தமிழ்ப் பல்கலை.யில் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சி நிறைவு

தஞ்சாவூர், அக். 6: தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் தமிழ் வளர்ச்சித் துறையின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம், தமிழ்ப் பல்கலைக்கழக அகராதியியல் துறை சார்பில் சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்ட நிறைவு விழா வெள்ளிக்கிழமை நடைபெற்றது.

இந்த விழாவுக்குத் தலைமை வகித்த துணைவேந்தர் வி. திருவள்ளுவன் பேசுகையில், பொறியியல், மருத்துவம், மேலாண்மை தொழில்நுட்பம் சார்ந்த பல்வேறு புதிய கண்டுபிடிப்புகள் மூலம் 13.20 லட்சம் கலைச் சொற்களைத் தமிழ் மொழியில் உருவாக்கியுள்ள செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலி திட்ட இயக்ககத்தைப் பாராட்டுகிறேன். தமிழ் மொழி வளர்ச்சிக்கென அரசு செயல்படுத்தும் அனைத்து நலத்திட்டங்களுக்கும் தமிழ்ப் பல்கலைக்கழகம் உறுதுணையாக இருக்கும் என்றார் அவர்.

செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்குநர் கோ. விசயராகவன் பேசுகையில், சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டத்தில் பயிற்சி பெற்ற மாணவர்கள் இணையதளத்தின் வாயிலாகவரான

தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் வெள்ளிக்கிழமை நடைபெற்ற சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்ட நிறைவு விழாவில் பேசிய துணைவேந்தர் வி. திருவள்ளுவன்.

மருத்துவப் பல்கலைக்கழகச் சிறப்பு நிலைப் பேராசிரியர் க. நரேந்திரன், கலை பண்பாட்டுத் துறை இணை இயக்குநர் (ஓய்வு) இரா. குணசேகரன் சிறப்புரையாற்றினர்.

மாவட்டத்திலுள்ள பான் செக்கர்ஸ் மகளிர் கல்லூரி, குந்தவை நாச்சியார் அரசு மகளிர் கலைக் கல்லூரி, சுவாமி விவேகானந்தா கலைக் கல்லூரி, கரந்தை தமிழவேள் உமாமகேசுவரனார் கலைக் கல்லூரி, நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் திருவருள் கல்லூரி, திருக்காட்டுப்பள்ளி அரசு கலை

போதி அரசு கலைக் கல்லூரி, டாக்டர் நல்லி குப்புசாமி கல்லூரி, திருவையாறு அரசர் கல்லூரி, தமிழ்ப் பல்கலைக்கழகம் உள்பட 17 கல்லூரிகளைச் சேர்ந்த மாணவர்களுக்கு நான்கு நாள்கள் பயிற்சி அளிக்கப்பட்டு சான்றிதழ் வழங்கப்பட்டது.

தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிவாளர் (பொ) சி. தியாகராஜன், வளர்தமிழ்ப் புலத் தலைவர் இரா. குறிஞ்சிவேந்தன் உள்ளிட்டோர் கலந்து கொண்டனர்.

முன்னதாக, அகராதியியல் துறைத்



மாலை தமிழகம்

## உடனுக்குடன் தமிழ்க் கலைச்சொல் படைப்பதற்கு மாணவர்களால் தான் முடியும்: மருத்துவர் நரேந்திரன்



மாலை தமிழகம்

## கணினி மற்றும் கைப் பேசிகளில் இயக்கு மொழியாக தமிழை பயன்படுத்த வேண்டும்: விசயராகவன் பேச்சு

கல்பாக்கம், அக். 10-

தமிழ்நாடு அரசு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ் கிண்டி, செல்லம்மாள் மகளிர் கல்லூரித் தமிழ்த்துறை மாணவியருக்கு கடந்த மாதம் 25ம் தேதி முதல், அக்., 9ம் தேதி வரை பயிற்சி சிறப்பாக நடைபெற்றது. இந்த பயிற்சியின் நிறைவு நாள் அன்று அகரமுதலி இயக்கக இயக்குனர் கோ.விசயராகவன் கலந்து கொண்டு மாணவியருக்கு அரசு சான்றிதழ்களை வழங்கி உரையாற்றினார். அவர் பேசுகையில், ''தமிழ்மொழியைத் தாய்மொழியாகப் பெற்றதற்குத் தமிழர்கள் அனைவரும் பெருமை கொள்வோம். அவ்வாறு பெருமை கொள்ளும் நாம் எல்லாம் தெரிந்து கொள்ள வேண்டும். கணினி மற்றும் கைப் பேசியில் முழுவதுமாகத் தமிழ் பயன்படுத்த வேண்டும். படிக்காத பாமரர்கள் கூட நம் தாய்மொழியாம் தமிழ் மொழியை பொது தளங்களில் பயன்படுத்துகிறார்கள். மெத்தப் படித்தவர்கள் தான் பிறமொழிகள் கலந்து தமிழ்மொழி பேசுவதை நாகரிகமாக எண்ணுகிறார்கள்.

இது மொழி வளர்ச்சிக்கு உகந்தது அல்ல. இதையெல்லாம் மாணவர்கள் நீங்கள் நீக்க வேண்டும். இந்நிலை மாற்றவேண்டும். நீங்கள் பெற்றப் பயிற்சி இதற்கு பயன் படும். எனவே தமிழ் படித்த அனைவரும் இனி மேல் அனைத்து நிலைகளிலும் தமிழ் மட்டுமே பயன்படுத்த உறுதி ஏற்க வேண்டும். அதுமட்டும் இல்லாமல் கோவிலுக்குச் சென்றால் தமிழில் வழிபாடு செய்யுங்கள். தமிழ்த்துறை மாணவர்கள் வெறும் பாடங்களை மட்டும் பயில்பவர்கள் அல்லர், வாழ்வியல் அறங்களையும், மக்களின் மனங்களையும் படிப்பவர்கள். தமிழ்த் துறை மாணவர்கள் பன்மொழி அறிவோடு கலைச் சொல்லாக்கத் திறனையும் வளர்த்துக்கொள்ள வேண்டும். பிறமொழிக் கலப்பின்றிப் பேசுதல், அழகிய தமிழ்ப் பெயர் சூட்டுதல், தமிழிலேயே கையொப்பமிடுதல் ஆகியவற்றைத் தம் கடமையாகக் கொண்டு கடைப்பிடிக்க வேண்டும். மொத்தத்தில் தமிழை இளைய தலைமுறை மாணவர்கள் தம் வாழ்வியலாகக் கொண்டு செயலாற்றி வெற்றிபெற வேண்டும்,'' என்றார். இந்த நிகழ்ச்சியில், ஒருங்கிணைப்பாளர் தொகுப்பாளர் வே.பிரபு மற்றும் கி.ராமர், பதிப்பாசிரியர்கள், கண்காணிப்பாளர் மற்றும் அலுவலர்கள், பணியாளர்கள் உட்பட பலர் கலந்து கொண்டனர்.



## அகரமுதலியில் புதிதாக 225 கலைச்சொற்கள் ஏற்பு

சென்னை, செப். 22-

தமிழ் வளர்ச்சி துறையின் கீழ் இயங்கும் செந்தமிழ் சொற்பிறப்பியல் 'அகரமுதல்' திட்ட இயக்ககத்தின் சார்பில், துறை சார்ந்த பிறமொழி சொற்களுக்கு, துாய தமிழ் சொற்களை உருவாக்கும் பணி நடக்கிறது. அந்த சொற்களை வல்லுனர் குழு ஆராய்ந்து ஒப்புதல் வழங்குகிறது.

அந்த வகையில், நேற்று, அந்த இயக்ககத்தின் இயக்குனர் விஜயராகவன் தலைமையில், வல்லுனர் குழு, புதிய கலைச்சொற்கள் குறித்து விவாதித்தது. அதில், 225 கலைச்சொற்களை ஏற்றது.

# சட்டத் துறைக்கு 1,362 தமிழ்க் கலைச்சொற்கள்

## வல்லுநர் குழு வழங்கியது



சென்னை
மதுரை
கோவை
திருச்சி
திருநெல்வேலி
வேலூர்
தருமபுரி
புது தில்லி
விழுப்புரம்
நாகப்பட்டினம்
http://www.dinamani.com

தினமணி

சனிக்கிழமை
30 செப்டம்பர் 2023
சென்னை
12 பக்கங்கள் ரூ.9

# சட்டத் துறைக்கு 1,362 தமிழ்க் கலைச்சொற்கள்: வல்லுநர் குழு வழங்கியது

**சென்னை, செப். 29:** சட்டத் துறையில் பயன்படுத்துவதற்காக சட்ட வல்லுநர்கள் குழுவினர் 1,362 கலைச் சொற்களை வழங்கியுள்ள நிலையில், அந்த சொற்கள் குறு நூலாக தொகுக்கப்பட்டு பயன்பாட்டுக்கு கொண்டுவரப்படவுள்ளன.

சட்டத் துறையில் உள்ள அனைத்துச் சொற்களுக்குமான தமிழ்க் கலைச் சொற்களை உருவாக்கும் வகையில் துறைசார் வல்லுநர்கள் கூட்டம் சென்னையில் உள்ள தமிழக அரசின் அகரமுதலித் திட்ட இயக்கக அலுவலகத்தில் வெள்ளிக்கிழமை நடைபெற்றது.

இந்தக் கூட்டத்தில் சென்னை மாவட்ட முன்னாள் நீதிபதி கு. தர்மராஜ், மாநில சட்ட ஆட்சிமொழி ஆணைய முன்னாள் உறுப்பினர் மு. முத்துவேல், வழக்குரைஞர்கள் இ. அங்கயற்கண்ணி, இரா. கணேசன், பா.மு. திருமலை தமிழரசன், கு. பகவத் சிங், பா. மீனாட்சி சுந்தரம் உள்ளிட்ட துறை சார்ந்த பல வல்லுநர்கள் கலந்து கொண்டு ஆய்வு செய்து சட்டத் துறை சார்ந்த 1,362 தமிழ்க் கலைச்சொற்களை அகரமுதலி இயக்ககத்துக்கு வழங்கினர்.

முன்னதாக, கூட்டத்துக்கு தலைமை வகித்து அகரமுதலி இயக்குநர் கோ.விசயராகவன் பேசுகையில், சட்டக் கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்துப் புழக்கத்துக்குக் கொண்டுவரவேண்டும். உரிமையியல் மற்றும் குற்றவியல் வழக்காடு மன்றங்கள் சார்ந்த சொற்கள் தமிழில் இல்லை என்ற நிலையை மாற்ற வேண்டும். அதற்கு இதுபோன்ற சட்ட வல்லுநர்களின் துணையும் ஒத்துழைப்பும் தேவை என்றார் அவர்.

முன்னதாக, இந்த கூட்டத்தில் திட்ட ஒருங்கிணைப்பாளர் ஜெ. சாந்தி, தொகுப்பாளர்கள் வே.கார்த்திக், பிரபு, பதிப்பாசிரியர் தி. பாலசுப்பிரமணியன் உள்ளிட்டோர் கலந்து கொண்டனர்.

வல்லுநர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில : jury-சான்றாயம், abrogation-சட்ட நீக்கம், criminal intention-குற்ற நோக்கம், fiction of law-சட்டங்கொள் புனைவு.

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

"நன்று தமிழ் வளர்க! தமிழ்
நாட்டினில் எங்கணும் பல்குக! பல்குக!
என்றும் தமிழ் வளர்க – கலை
யாவும் தமிழ்மொழியால் விளைந்தோங்குக"

– பாவேந்தர் பாரதிதாசன்

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.

புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களிடமிருந்தும் பல்வேறு துறைசார்ந்த கலைச்சொற்களைப் பெற்று, ஆய்ந்து சொற்குவையில் சேர்த்து, தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில், தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. இப்பயிலரங்கத்தின் 103–106 வரையிலான அமர்வுகள் 2023 செபுதம்பர் 19, 22, 29, அகுதோபர் 06 ஆகிய நாள்களில் நடைபெற்றன. பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர்

இரா. பன்னிருகைவடிவேலன் மற்றும் இயக்கக உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ. காந்தி ஆகியோரும் மேற்கொண்டனர்.

## 19.09.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**முனைவர் மெய். சித்ரா**
தலைவர், தமிழ்ப் பண்பாட்டு இயக்கம்,
ஆங்காங்





**நற்றமிழ்ப் பாவலர் மறத்தமிழ்வேந்தன்**
மாநிலத் தலைவர், தமிழ் மீட்சிப் பாசறை,
போரூர்

**திரு. ப. செல்வ விநாயகம்**
மேனாள் முதல்வர், உடுப்பிட்டி
அமெரிக்கன் மிஷன் கல்லூரி,
வல்லொட்டித்துறை, இலங்கை





**திருமதி வெ. காயத்ரி**
மொழிபெயர்ப்பாளர், கோயம்புத்தூர்

## 22.09.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**திரு. த. சுதாகரன்**
வழக்கறிஞர், பிரான்சு





**நற்றமிழ்ப் பாவலர் மறத்தமிழ்வேந்தன்**
மாநிலத் தலைவர், தமிழ் மீட்சிப் பாசறை,
போரூர்

**பொறிஞர் உலோ. செந்தமிழ்க்கோதை**
அறிவியல் எழுத்தாளர், சென்னை



## 29.09.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**பேரா. மரு. போல் யோசெஃப்**
மேனாள் பேராசிரியர், கனடா





**முனைவர் பேரா. து. உதயன்**
மின்பொறியியல் ஒளியியல் வல்லுநர்
கனடா

**மரு. விக்டர் ஜோன் பிகுராடோ**
கனடா





**முனைவர் இரா. இந்து**
இணைப் பேராசிரியர்
அறிவியல் தமிழ் (ம)
தமிழ்வளர்ச்சித் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்

06.10.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில்
கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**திரு. ப. செல்வ விநாயகம்**
மேனாள் முதல்வர், உடுப்பிட்டி
அமெரிக்கன் மிஷன் கல்லூரி,
வல்லொட்டித்துறை, இலங்கை



**கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு**
உரையாசிரியர், நூல் மதிப்புரையாளர்,
சென்னை



**திருமதி நாச்சியார் அருள்**
நிறுவுநர், தமிழ் ஆப்பிரிக்கா அமைப்பு
தான்சானியா, கிழக்கு ஆப்பிரிக்கா



**நற்றமிழ்ப் பாவலர்**
**மறத்தமிழ்வேந்தன்**
மாநிலத் தலைவர், தமிழ் மீட்சிப்
பாசறை,
போரூர்

# நாகரிகமா? நாகரீகமா?

நாகரிகம் என்ற சொல்லை நாகரீகமாக்குவதும் நாகரிகம் ஆகாது. இதுவும் பேச்சு முறையால் வந்த திரிபேயாகும். இதன் பழைய ஆட்சிகள் எல்லாம் "நாகரிகம்" என்றே உள்ளன. திருவள்ளுவரும் "நயத்தக்க நாகரிகமே" வேண்டும் என்பார் (580). பிற்கால இலக்கியத்தில்தான் "நாகரீகம்" என்ற சொல்வழக்குக் காணப்படுகிறது. அருணாசலக் கவிராயரின் இராம நாடகத்தில் "நாகரீக வேடிக்கை" என்று வருகிறது (யுத். 124). அவை பேச்சு வழக்கை ஒட்டி வந்துவிட்டன. எனினும் கட்டளைத் தமிழின்படி "நாகரிகம்" என்றே சொல்லவும் எழுதவும் வேண்டும்.

நன்றி : உங்கள் தமிழைத் தெரிந்துகொள்ளுங்கள்

# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில...

**முனைவர் மெய். சித்ரா**

Presenting Arena - வழங்குகளம்
Shooting arena – சுடுகளம்
Praying arena – வணங்குகளம்

**திரு. ப. செல்வ விநாயகம்**

Tamilology – தமிழியல்
Separation of Rights – வலுவேறாக்கம்
Action Research – செயல்நிலை ஆய்வு

**நற்றமிழ்ப் பாவலர் மறத்தமிழ்வேந்தன்**

Athou – கூட்டிழைமா
Seechow – பொறி இழைமா / வறு இழைமா
Maoufato – இலைக்கொழுக்கட்டை

**திருமதி வெ. காயத்ரி**

Microcast Process – நுண்வார்ப்பு செயல்முறை
UNEARTHING – அகழ்ந்தெடுத்தல்
Macro Etch – பெரும செதுக்கல்

**திரு. த. சுதாகரன்**

Sexual Harassment – பாலியல் தொந்தரவு
Child Abuse – சிறுவர் வன்முறை
Incest – விரும்பத்தகாத பாலுறவு

**பெறிஞர் உலோ. செந்தமிழ்க்கோதை**

Binary Stars – இருமவிண்மீன்கள்
Cluster – பால்வெளிக்கொத்து / விண்மீன்கொத்து
Super nebula – மீஒண்முகில்

**நற்றமிழ்ப் பாவலர் மறத்தமிழ்வேந்தன்**

Pragyan Rover – சுற்றறிவூர்தி
Poodhijov – சுரைக்காய்மென் அடை
Naambhiaaiae – மீன்பதச்சாறு

**பேரா. மரு. போல் யோசெஃப்**

Trigeminal Neuralgia – முகமுக்கிளை நரம்புவலி
Brachial plexus – புயப்பிணையம்
Polymyositis – பலதசையிழைய அழற்சி

**மரு. விக்டர் ஜோன் பிகுராடோ**

Backward Point – பின்நோக்கிடம்
Cover – அடையிடம்
Fly Slip – பாய் நடுவிடம்

**முனைவர் பேரா. து. உதயன்**

Adaptive color shift – வண்ணமாற்றத் தழுவல்
Aperture color – துளையறி நிறம்
Chromaticity Diagram – வ ண் ண த் த ன் மை வரைபடம்

**முனைவர் இரா. இந்து**

Chuck – உருளைப்பிடிப்பி
Killed Steel – உயிர்வளி நீக்கிய எஃகு
Reamer – துளை விரிவாக்கி

**திரு. ப. செல்வ விநாயகம்**

salutation – தொடக்க விளிப்பு
Fire lady – கற்பின் கனலி
Mortgage – ஈடுவைத்தல்

**திருமதி நாச்சியார் அருள்**

Steamer / Vapourizer – நீராவிப்பொறி
Massager – நீவல்பொறி
Reflexology – தூண்டல் இயன்மருத்துவம்

**கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு**

Supercontinent – மீப்பெரு கண்டம்
Stalactite – கனிமத்திரட்டு
Ocelot – காட்டுப்பூனை

**நற்றமிழ்ப் பாவலர் மறத்தமிழ்வேந்தன்**

Mutual Fund – சமனியக் குவையம்
Mutual Benefit – சமனியப்பயன்
Lobbyist – முகப்பியக்கர்

> தனிமைச் சுவையுடைய
> சொல்லை – எங்கள்
> தமிழினும் வேறெங்கும் யாம்
> கண்டதில்லை
>
> – பாவேந்தர் பாரதிதாசன்